# அம்புலிமாமா

மதிமுகம் : 104 டிசம்பர் 2000 புன்னகை : 6



## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக



பலவீரனின் தீர்மானம் (வேதாளக் கதை)

வாராயோ மரணமே





சரவணின் சாக்குமூட்டை

பாரதப் பண்பாடு-வரலாறு



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, No.82, Defence Officers Colony, Ekattuthangal, Chennai - 600 097. Editor: Viswam

நீங்கள்

அயல்நாடுகளில்
உள்ள உங்கள்
உறவினர், நண்பர்களுக்கு



# அம்புலிமாமா

இதழை அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

**அஸ்ஸாமி, வங்காளம், ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு**

அயல் நாட்டிலும் தாய்நாட்டில் உள்ள மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கட்டும்

## சந்தா விவரம்

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில் பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.900.

இந்தியாவில் தரைவழித் தபாலில் பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.120.

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டியில் அல்லது மணியார்டரில் '**சந்தமாமா இந்தியா லிமிடெட்**' என்ற பெயர் எழுதி அனுப்பவும்

முகவரி :
பதிப்பகப் பிரிவு
**சந்த மாமா இந்தியா லிமிடெட்**
82, டிபென்ஸ் அதிகாரிகள் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை - 600 097.


ஆசிரியர்
**விஸ்வம்**



எல்லாக் கடிதப் போக்குவரத்திற்கும்
சந்தமாமா பத்திரிக்கைப் பிரிவு
முகவரி :
சந்த மாமா இந்தியா லிமிடெட்
82, டிபென்ஸ் அதிகாரிகள் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல்,
சென்னை - 600 097.
டெலி/ பேக்ஸ் 2347384/2347399
ஈமெயில் :
சந்தமாமா @ விஎஸ்என்எல்.காம்


அமெரிக்காவில் தனிப் பிரதி 2 டாலர்கள் வருட சந்தா:20 டாலர்கள்

பணம் அனுப்ப
வேண்டிய முகவரி:
**இந்தியா அப்ராட்**
43, வெஸ்ட் 24வது தெரு
நியூயார்க், என்.ஒய்.10010
டெலிபோன் : (212)929-1727
பேக்ஸ் : (212) 627-9503



எமது அடுத்த இதழ் ஈராயிரமாவது ஆண்டு இதழாக வெளியிடப்பட இருக்கிறது. இதில் சுதந்திரத்திற்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன் பாரதம் என்றும் சுதந்திரத்திற்கு ஐம்பது ஆண்டுகளுக்குப்பின் பாரதம் என்றும் இரு சிறப்பு அம்சங்கள் இடம் பெறும். இந்த இதழை நீங்கள் பல்லாண்டு காலத்திற்கு வைத்திருக்க விரும்புவீர்கள். '2001வது ஆண்டுத்திட்டம்' என்பது சந்தாதாரர்களுக்கு மட்டும் இத்துடன் அளிக்கப்படுகிறது. எனவே நீங்கள் வாடிக்கையாக சந்தாதாரராக இது ஒரு அரிய வாய்ப்பு. எனவே மணியார்டரிலோ அல்லது வங்கி டிராப்ட் வாயிலாகவோ உங்கள் பணத்தை அனுப்புங்கள்.



நிறுவியோர்
பி.நாகிரெட்டி சக்கரபாணி

# இந்த ஆண்டிற்குப் பிரிவுபசாரம்

மிகக் கோலாகலத்துடனும் குதூகலத்துடனும் வரவேற்கப்பட்ட 2000ம் ஆண்டு முடியப் போகிறது. பலர் இந்த ஆண்டின் ஆரம்பத்தில் இதுவே 21வது நூற்றாண்டின் ஆரம்பம் என்றும் புதிய ஆயிரமாவது ஆண்டின் பிறப்பு எனவும் கூறினர். வேறு சிலர் அவர்கள் கூறுவது சரியல்ல என்றும் 2001 ஆண்டுதான் இவை இரண்டின் பிறப்பு எனவும் அடித்துக் கூறினார்கள்.

இந்த 2000ம் ஆண்டு கழிந்து விட்டது. வரப்போகும் ஆண்டு புதிய சகாப்தத்தைத் துவக்கும் என நம்பிக்கை கொள்வோம். எந்த ஆண்டையும் மகிழ்ச்சியுடன் நன்கு வரவேற்பது போலவே இந்த ஆண்டையும் புதிய உலகை புது வேளையில் புது சகாப்தமாக ஆக்குவோம் என உறுதி கொள்வோம்.

காலம் என்பது நல்லதோ கெட்டதோ அல்ல. அதற்கு ஆயுள் கிடையாது. அதற்கு 2000 வயதாகி விட்டது என்பதும் சரியல்ல. காலத்தை நாம் நம் விருப்பப்படி மதிப்பிட்டிருக்கிறோம். நல்லது அல்லது கெட்டது என்பது நம் செயலைப் பொறுத்தே அமைகிறது.

ஒரு ஆண்டு பிறப்பதில் மகிழ்ச்சி அடைவது எவ்விதத் தவறும் இல்லை. ஆம். நாம் ஒவ்வொருவரும் அந்த ஆண்டில் நற்செயல்களைப் புரிய உறுதி கொள்ள வேண்டும். எனவே நாம் அதையே செய்வோம். இந்த ஆண்டை அது நமக்குக் கொடுத்த அனுபவங்களை எண்ணி அவற்றால் படிப்பினைகளைப் பெற்றோம் என நினைத்து அதற்கு விடைகொடுத்து அனுப்புவோம்.



# செய்திச் சுடர்

## செய்திகளில் சிறுவர் சிறுமியர்
## நாட்டு அதிபருக்கு சிறுவன் ஆலோசகன்!




கௌதிமாலா நாட்டின் அதிபர் அல் போன்சோ போர்ட்டிலோ கல்வி, சுற்றுப்புறச் சூழல்துறைகள் பற்றிய விஷயங்களில் யாரிடம் ஆலோசனை கேட்கிறார் என்று தெரியுமா? சாமுவேல் எஸ்ட்பென் கோமெஸ் என்னும் பதிமூன்று வயதுச் சிறுவனிடம் தான். இச்சிறுவன் அமைச்சரவைக் கூட்டங்களில் சிறப்பு அழைப்பாளனாகக் கலந்து கொள்கிறான். அதிமேதாவி எனப்படும் இந்தப் பள்ளி மாணவன் கௌதிமாவாவின் ஒரு பல்கலைக்கழகத்தில் கணக்கியல் முதுநிலை வகுப்பில் உள்ளவன். விமான யந்திரப் பொறியியல் பயிற்சி பெற இவன் விரும்புகிறான். ஒரு நாள் நாட்டதிபர் ஒரு நாள் மக்களவைத் தலைவர் என்ற அரசியல் செயல்பாடுகளில் இவன் ஈடுபட்டிருக்கிறான். ராஜதந்திரிகள் உலகிலும் சாமுவேல் அடி எடுத்து வைத்து அமெரிக்க அதிபர் கிளிண்டன், ஸ்பானிய அரசின் வாரிசான இளவரசர் பீலிப், கௌதிமாலாவின் முன்னாள் அதிபர் ஆல்வரோ, ஆர்ஜு ஆகியோரை சந்தித்து உரையாடி இருக்கிறான். இவன் போல கனடாவில் இரு இந்திய மாணவர்களான புனீத்சேஹலும் சுல்தான் சந்துரும் அந்நாட்டு கல்வி அமைச்சர் திருமதி பென்னிபிரிட்டியின் ஆலோசகர்கள்.

## இளம் வயது மாயவித்தைக்காரர்

சதிஷ்தேஷ்முக் உலகின் பெயர் பெற்ற மாய வித்தைக்காரர். அவரது வித்தைகளில் ஒன்றை அவரது மூன்று வயது மகள் கிமியா செய்து காட்டினாள். உலகில் மிகக்குறைந்த மாய வித்தைக்காரி என்ற பெயர் இச்சிறுமிக்குக் கிடைத்துள்ளது. இச்சிறுமி பம்பாய் திரைப்படம் ஒன்றில் ஹிர்திக் ரோஷனுடன் நடித்திருக்கிறாள்.



## அதிமேதாவிகள் தானே!




- ஜஸ்டின் சாப்மென் ஆறு வயதானவன். இரண்டாவது வயதில் இவன் எழுதப் படிக்க ஆரம்பித்து இப்போது ரோசெஸ்டர் பல்கலைக் கழகத்தில் மூன்று வகுப்புகளில் சேர்ந்திருக்கிறான். இவன் ஹோமரின் இலியட் பற்றி ஒரு ஆய்வுக் கட்டுரை எழுதி பீ கிரேட் வாங்கியுள்ளான். இப்போது வரலாற்றைப் பாடமாக எடுத்துப் பயின்று வருகிறான்.
- எம்மெட் பர்லா பிலிம்ஸ் என்ற நிறுவனம் தயாரிக்கும் 'கேம்ப் கிரிஸ்லி' என்ற திரைப்படத்தின் இயக்குனருக்கு மிகச் சிறிய நாற்காலி ஒன்றைச் செய்ய வேண்டியதாயிற்று. ஏனெனில் அவர்கள் இதற்காகத் தேர்ந்தெடுத்த செயில் ஸ்டேவால் பதினோறு வயதுச் சிறுவனே
- வயநாட்டில் முஸ்லிம் மத சம்மந்தக் கூட்டங்களில் பனிரெண்டு வயதான ரஷீத் என்ற சிறுவன் ரம்ஜான் மாதத்தில் உரையாற்றி வருகிறானாம். இவன் ஆங்கிலம், உருது, அரபி, ஹிந்தி ஆகிய மொழிகளில் தங்கு தடையின்றி பேசும் ஆற்றல் பெற்றவன்.

## நான்கு 'வெப்சைட்'களை சிறுவன் துவக்கினான்!



சென்னையைச் சேர்ந்த ஏ.வி.தினேஷ் என்ற பதினொன்றாவது வகுப்பு மாணவன். நான்கு ஆண்டுகளுக்கு முன் மைக்ரோ சாப்டின் இரு தேர்வுகளில் தேர்ந்தான். அப்போது அவனது வயது பனிரெண்டு. இதற்குப்பின் பல்வேறு தரப்பட்ட மக்களுக்கு வெப்சைட் அமைத்துக் கொடுக்கலானான். இது வரை இவன் 4000 பக்க வரிகள் அமைப்புகளை அமைத்திருக்கிறான். குழந்தைகளுக்கு ஸ்பைசி கிட்ஸ்கம் என்றும் இளம் வாலிபர்களுக்கு டீன்ஏஜ் டைகாஸ்கம் என்றும் புரோகிராமர்களுக்கு சைட்களை அணுக தினேஷ் வேல்ட்கம் என்றும் அமைத்திருக்கிறான்.



# ஓராண்டு நிறைவுற்றது

அம்புலிமாமா ஓராண்டிற்கு முன் மீண்டும் வெளிவரத் தொடங்கியது நம் எல்லோருக்கும் மகிழ்வூட்டுகிறது.

அன்பு மிக்க வாசகர்களே,

இந்த ஓராண்டு காலமாக அம்புலிமாமாவின் 12 இதழ்களைத் தொடர்ந்து பெறும் வாய்பினை அடைந்துள்ளீர்கள் நீங்கள் பொறுமையாகக் காத்திருந்ததும் நாங்கள் உங்கள் எதிர்பார்ப்பை வீணாக்கவில்லை என்றும் தானே உணர்கிறீர்கள். அம்புலிமாமா என்று கூறியதும் உங்கள் நினைவிற்கு வருவது வேதாளம் கதைகளும், புராணக்கதைகளும்தானே. இவை நம் பண்பாட்டையும் வாழும் முறைகளையும் விளக்குகின்றன. இவற்றோடு பல்நாட்டுக் கதைகளையும் நீங்கள் விரும்பி எழுதிய பல அம்சங்களையும் வெளியிட்டு வருகிறோம். அம்புலிமாமா புதிய தகவல் தொடர்பு சாதனங்களைப் பயன்படுத்தி தொடர்கள், தொலைக் காட்சித் தொடர்கள், வெப்சைட், திரைப்படங்கள் எனவும் பலவற்றை அளிக்க முடிவு செய்துள்ளது.

இதனால் அம்புலிமாமா தன் பழம் புகழைத் தக்க வைத்துக் கொண்டுள்ளது தெரிகிறது. இது நாளுக்குநாள் பெருகி வரும் வாசக அன்பர்களாலும் கடந்த ஓராண்டில் கூட்டாக ஒன்று திரண்டு பணிபுரிந்தவர்களாலும் இதற்கெல்லாம் முக்கிய காரணமாகி தோள் கொடுத்துத் தூக்கி உதவிய திரு.வினோத் சேத்தியாலும், அன்னையின் அருளாலும் தான் சாத்தியமாகி வருகிறது.

இந்த ஓராண்டு நிறைவு மகிழ்ச்சிகரமான சந்தர்ப்பத்தில் அம்புலிமாமா நம் நிறுவனத்தில் பணிபுரிந்து வரும் யாவருக்கும் எம் நல்வாழ்த்துக்களை தெரிவிப்பதோடு இந்த இதழை நம் நாட்டு வருங்கால சந்ததியினருக்கும் அர்ப்பணிக்கிறோம்.

அன்புள்ள
**பி.விஸ்வநாத ரெட்டி,**
வெளியிடுபவர்.



வேதாளம் சொல்லும் கதை

# பலவீரனின் தீர்மானம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதை எடுத்துச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி விடாப்பிடியாக முயன்று சிரமப் படுவதைப் பார்த்தால் முடிவில் நீ விரும்புவது கிடைக்காமல் போய் விடுமோ என அஞ்சுகிறேன். இதற்கு பலவீரன் என்பவனின் கதையைக் கூறுகிறேன் கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை



நீங்கள் வீணாகக் கவலைப் பட வேண்டாம். ஒரு நாட்டைக் கைப்பற்ற படைகள்தான் வேண்டும் என்பதில்லை. வேறு பல வழிகள் உள்ளன. நான் வீரபுரிக்குப் போய் அங்கு குழப்பங் களை உண்டாக்கிக் கலகங்கள் ஏற்படும் படிச் செய்கிறேன். அப்போது வீரசேன னின் முழுக் கவனமும் கவகங்களை அடக்குவதில் திரும்பிவிடும். அந்த சமயத்தில் நம் படைகளைக் கொண்டு வீரபுரியைத் தாக்கி அதை எளிதில் கைப்பற்றி விடலாம்'' என்றான். சூரசேனனும் அவ்வாறே செய்யுமாறு தன் அமைச்சனிடம் கூறவே மர்க்கடகனும் வீரபுரிக்குச் சென்றான்.

இச்சமயத்தில் வீரபுரத்தின் கிழசேனாதிபதி மாரடைப்பால் இறந்து போனார். அதனால் புதிய சேனாதி பதியை நியமிக்கும் பிரச்சினை எழுந்தது. இதே சமயம் அந்நாட்டு எல்லையில் புலிமாயன் என்ற மோசக்காரன் இருந்தான். அவன் மக்களை ஏமாற்றிப் பணம் பறித்து வந்ததால் ஒருநாள் அப் பகுதி மக்கள் ஒன்று கூடி அவனைப் பிடித்து அடி அடி என்று அடிக்கவே அவன் பயந்து அவர்களிடமிருந்து தப்பி அருகிலிருந்த காட்டிற்குற் ஓடிப் போனான்.

அங்கே ஏதாவது ஒரு மறைவிடத்தில் குடிசை போட்டுக் கொண்டு தங்கி விடலாமென எண்ணிய அவன் அதற் கான தகுந்த இடத்தை தேடலானான். அப்போது ஓரிடத்தில் யாரோ ''தாகம்!! தண்ணீர்!!'' என்று கத்துவது அவன் காதில் விழுந்தது. யாரென்று அவன்

சொல்ல ஆரம்பித்தது.

வீரபுரி என்ற நாட்டை வீரசேனவர் மன் என்ற மன்னன் திறன்பட ஆண்டு வந்தான். அவன் படை பலமும் புத்திபலமும் கொண்டவன். அதனால் அவனது நாட்டைத் தாக்கவோ கைப் பற்றவோ எந்த மன்னனும் முயலவில்லை.

வீரபுரியை எப்படிக் கைப்பற்றுவது என்று அதன் அண்டை நாடான சூரபுரியின் மன்னன் சூரசேனன் ஏங்கிக் கொண்டிருந்தான். வீரசேனன் படைமுன் தன்படை நிற்க முடியாது என்பது அவனுக்கு நன்கு தெரியும். எனவே அவன் மனம் புழுங்கியவாறே நோய் வாய்ப்பட்டு படுத்த படுக்கையாகக் கிடந்தான். இதைக் கண்ட அவனது அமைச்சனான மர்க்கடகன் ''அரசே!

போய்ப் பார்த்தபோது பெரும் பாறைகளுக்கிடையே ஒரு ராட்சஸன் தவிப்பதைக் கண்டான். உடனே புலிமாயன் சுற்றிலும் பார்த்து சற்று தூரத்திலிருந்த சிற்றாறை நோக்கி ஓடினான். சில இலைகளைப் பறித்து கிண்ணமாகத் தைத்து அதில் ஆற்று நீரை எடுத்து வந்து ராட்சஸன் வாயில் ஊற்றிக் குடிக்க வைத்தான்.

அப்போது ராட்சஸன் "நான் இருகால்கள் இல்லாதவன். ஆனாலும் ஈவிரக்கம் இல்லாமல் என் அண்ணன் என்னை அதோ தெரியும் மலை மீதிருந்து உருட்டி விட்டான். என்னோடு கற்களும் வந்து என் மீது விழுந்து நகர முடியாமல் செய்து விட்டன. கற்களை எடுத்து என்னை வெளியே தூக்கி விடு" என்றான். புலிமாயனும் கற்களை நகர்த்தி விட்டு ராட்சஸனை வெளியே எடுத்து விட்டான்.

அப்போது ராட்சஸன் "மிக்க நன்றி உனக்கு என்ன வேண்டுமோ கேள். என்னால் முடிந்த உதவியைச் செய் கிறேன்" என்றான். புலிமாயனும் "நீயோ காலில்லாதவன். உன்னால் என்ன செய்து விட முடியும்? எனக்கு வேண்டியது பணம்" என்றான். அது கேட்டு ராட்சஸன் "இங்கு மனிதர்கள் வர மாட்டார்கள். அதனால் உனக்கு என்னால் பணம் கொடுக்க முடியாதுதான்" என்றான். அப்போது புலிமாயன் சற்று யோசித்து "நான் காட்டிற்கு வெளியே போய் எப்படியோ மனிதர்களை இங்கே உன்னிடம் அனுப்பி வைக்கிறேன். நீ அவர்களைக்



கொன்று தின்று விடு. ஆனால் அவர்களிடமுள்ள பணம் நகைகள் முதலியவற்றை என்னிடம் கொடுத்து விட வேண்டும். இது சம்மதமா?" என்று கேட்டான். ராட்சஸனும் மகிழ்ச்சியுடன் அதற்கு இணங்கினான்.

புலிமாயனும் காட்டிற்கு வெளியே வந்து "ஸ்ரீராம பிரானின் சாபத்தால் கால்களை இழந்த ராட்சஸன் காட்டில் ராம நாமத்தை உச்சரித்துக் கொண்டு தவம் புரிகிறான். அவனை தரிசித்து ஆசிகள் பெற்றால் புண்ணியம் கிடைக்கும்" என்று மக்களிடையே வதந்தியைப் பரப்பினான். அவர்களும் அதை நம்பி காட்டிற்குப் போய் ராட்சஸனுக்கு இரை யானார்கள். இரண்டு நாட்களுக்கு ஒரு முறை புலிமாயன் காட்டிற்குள் 'போய்



ராட்சஸனைக் கண்டு அவன் எடுத்து வைத்திருந்த பணத்தையும் நகைகளையும் பெற்றுக் கொண்டு வரலானான்.

காட்டிற்குப் போய் ராமநாமம் ஜெபிக்கும் ராட்சஸனைக் கண்டவர்கள் திரும்பி வராததையும் புலிமாயன் செய்யும் பிரசாரத்தையும் கண்டு மக்கள் குழம்பிப் போனார்கள். மன்னனுக்கும் இவ்விஷயம் தெரிய வரவே அவன் அமைச்சர்களைக் கூட்டி ''காட்டில் நடக்கும் கோர சம்பவங்களைத் தடுத்து மக்களைக் காக்கக் கூடிய ஒருவனை நம் நாட்டின் சேனாதிபதியாக நியமிக்க விரும்புகிறேன். என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்கவே அவர்களும் ''இது சரியான முடிவே. இப்படியே பறைசாற்றுவிக்கிறோம்'' எனக் கூறி அவ்வாறே பறையும் சாற்றுவித்தனர்.

இதை அந்நாட்டு இளவரசனுடன் சேர்ந்து கல்வி பயின்ற பார்த்தன் என்பவன் கேட்டு காட்டிற்குச் சென்றான். அவன் போர்க்கலையிலும் சிறந்தவன். ராஜதந்திரத்திலும் தேர்ந்தவன். அவன் கிழராட்சஸனைத் தேடியவாறே அவன் இருக்கும் இடத்தை அடைந்து அங்கு மறைந்திருந்து என்ன நடக்கிறது என்று பார்க்கலானான். அன்று யாருமே ராட்சஸனைக் காண வரவில்லை. ஆனால் மாலைப் பொழுது கழிந்து இருட்டியதும் புலிமாயன் ஒரு பையுடன் ராட்சஸனைச் காண வந்தான்.

ராட்சஸனும் அவனைச் சிரித்த முகத்துடன் வரவேற்று அவன் கொண்டு வந்த பையில் நகைகளையும் பணத்தையும் போட்டான். புலிமாயனும் அந்தப் பையை எடுத்துக் கொண்டு காட்டிலிருந்து வெளியே வந்த போது அவனைப் பின் தொடர்ந்து வந்து பார்த்தன் அவனைப் பிடித்து அடித்து இழுத்துக் கொண்டு போய் வீரசேன வர்மனின் முன் நிறுத்தி ''அரசே! இவனது மோசச் செயலை பறை சாற்றுவித்தால் இனிமேல் யாருமே ராட்சஸனைப் பார்க்கப் போக மாட்டார்கள். கால்களில்லாத ராட்சஸனும் நாட்டிற்குள் வரவும் முடியாது. யாரையும் கொல்ல முடியாது. அவனால் எந்தத் தொல்லையும் கொடுக்க முடியாது'' என்றான்.

கத்தியின்றி, ரத்தமின்றி தன் அறிவைப் பயன் படுத்தி பெரும் பிரச்சினையைத் தீர்த்து விட்ட பார்த்தனை மன்னன் வெகுவாகப் பாராட்டினான். கபுலிமாயனை சிறைக்குள் தள்ளினான். மறு நாள் தர்பாரில் பார்த்தனுக்கு சேனாதிபதிப் பதவியை அளிக்கும் விழா ஆரம்பமாகும்

போது பலவீரன் என்பவன் ''அரசே! இதோபாருங்கள். காட்டிலிருந்த ராட்சஸனின் தலையை வெட்டிக் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று கூறித் தான் வெட்டிக் கொண்டு வந்த ராட்சஸனின் தலையை மன்னனுக்குக் காட்டினான். அவனோடு ஒரு கும்பலே தர்பாருக்குள் வந்துவிட்டது.

பலவீரனின் தந்தை போதானந்தர் அந்நாட்டிலேயே சிறந்த குருகுலத்தை நடத்தி போர்க்கலையில் பலர் திறமை பெறச் செய்து வந்தார். அதனால் பலவீரனின் நண்பர்கள் அவனது தந்தைக்கு உள்ள புகழால் சேனாதிபதி பதவி அவனுக்குக்கட்டாயம் கிடைக்கும் என்றும் அதற்காக அவன் முயற்சி செய்ய வேண்டும் என்று தூண்டினார்கள். அதைக் கேட்டே பலவீரன் காட்டிற்குப் போய் ராட்சஸனின் தலையை வெட்டி எடுத்து வந்து மன்னனுக்குக் காட்டினான்.

ராட்சஸனின் தலையைக் கண்ட மன்னன் ஒரு நிமிடம் வரை எதுவும் பேசமுடியாமல் போனான். ஆனால் சட்டென சுதாரித்துக் கொண்டு மன்னன் பலவீரனிடம் ''இந்தப் பரீட்சையில் உனக்கு முன்பே பார்த்தன் வெற்றி பெற்று விட்டான். அந்த ராட்சஸனால் தன்னந்தனியாக யாருக்கும் கெடுதல் செய்ய முடியாது. அப்படிப்பட்டவனைத் தான் நீ கொன்றிருக்கிறாய். ராட்சஸன் தன்னால் எதுவும் செய்ய முடியாதது கண்டு புலிமாயனின் உதவியால் மக்களைக் கொன்று வந்தான். அந்தக் கொடூரச் செயல்களுக்குக் காரணமாக இருந்த புலிமாயனைப் பிடித்துக்



கொண்டு வந்தான். அதனால் பிரச்சினை தீர்ந்து விட்டது'' என்றான்.

மன்னன் இவ்வாறு கூறியதைக் கேட்டதும் பலவீரனுடன் வந்த கும்பல் மன்னனது முடிவு சரியல்ல என்று கூச்சல் போட்டது. அப்போது பலவீரன் சமாதானப்படுத்தி அழைத்துக் கொண்டு தர்பாரை விட்டு வெளியே சென்றான். அக்கூட்டத்தில் மாறு வேடத்தில் கலந்து கொண்டிருந்த சூரபுரி அமைச்சன் மர்க்கடகனும் வெளியே வந்தான். அவர்களெல்லோரும் கொஞ்ச தூரம் வந்ததும் அவன் பலவீரனிடம் சென்று ''பலவீரா! பார்த்தன் இளவரசனின் நண்பன் என்பதால் தான் சேனாதிபதிப் பதவி அவனுக்கு அளிக்கப்பட்டது. தன்னந்தனியாக நீ போய் துணிச்சலுடன்



அந்தப் பிரமுகர்களும் அதிகாரிகளும் விடுவிக்கப் படுவார்கள் என்று வீரசேன மன்னனுக்குச் செய்தி அனுப்பப்பட்டது.

மன்னனும் நன்கு யோசித்தபின் பல வீரனைப் பற்றிய முழுவிவரங்களையும் அறிந்து வருமாறு தன் ஒற்றர்களுக்குக் கட்டளைஇட்டான். அவர்களும் இரண்டு நாட்களுக்குப் பின் திரும்பி வந்து "அரசே! இக்கலகங்களுக்கும் சூரபுரி மன்னனுக்கும் ஏதோ தொடர்பு உள்ளது. அந்நாட்டு அமைச்சன் மர்க்கடகனின் நடமாட்டம் நம் நாட்டில் இருப்பதும், அவன்தான் இக்கலகங்களை தூண்டி விடுகிறான் என்றும் தெரிகிறது" என்றார்கள்.

வீரசேனவர்மன் தன் அமைச்சர்களுடன் கலந்து ஆலோசித்து விட்டு பார்த்தனை சேனாதிபதிப் பதவியிலிருந்து நீக்கிவிட்டதாயும் பலவீரனுக்கு அப் பதவி அளிக்கப்படுவதாயும் பறைசாற்றுவித்தான். இதைக் கேட்டு பல வீரனின் நண்பர்கள் அவனை மேளதாளத்துடன் அழைத்து வர மறைவிடத்திற்குச் சென்றார்கள். ஆனால் பலவீரன் அங்கே இருக்கவில்லை. மர்க்கடகன் படுகாயமுற்று இறந்து கிடப்பதை அவர்கள் கண்டார்கள். ஒரு பாறையில் "நண்பர்களே! சேனாதிபதியாக நான் தகுதி பெற்றவன் அல்ல. நகரில் கலகம் விளைவித்து பொருட்சேதத்திற்குக் காரணமாக இருந்த சூரபுரி அமைச்சன் மர்க்கடகனை நான் கொன்று விட்டேன். நான் இந்த நாட்டை விட்டே வெளியேறுகிறேன். உங்களன்புள்ள பலவீரன்" என்று எழுதப்பட்டிருந்ததை அவர்கள் படித்தார்கள்.

ராட்சஸனை எதிர்த்து அவனது தலையை வெட்டி எடுத்து வந்தாய். உன் போன்ற வீரனுக்கல்லவா அப்பதவி கிடைக்க வேண்டும்! நீயும் உன் நண்பர்களும் நான் கூறுகிறபடி செய்தால் சேனாதிபதிப் பதவி உன்னைத் தேடிக் கொண்டு வரும்" என்று கூறி அவர்களைத் தன் இரகசிய மறைவிடத்திற்கு அழைத்துச் சென்றான்.

மறுநாள் மர்க்கடகன் கூறியபடி பலவீரனும் அவனது ஆட்களும் தலை நகருக்கு வந்து கடைகளைச் சூறையாடி முக்கியமான வியாபாரிகளையும் அரசாங்க அதிகாரிகளையும் பிடித்து இழுத்துப் போய் மர்க்கடகனின் இரகசிய மறைவிடத்தில் அடைத்து வைத்தார்கள். பலவீரனுக்கு சேனாதி பதிப் பதவியைக் கொடுத்தால்தான்

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! சேனாதிபதி பதவியை அடைய கலகங்களைமூட்டிய பலவீரன் தண்டிக்கப் பட வேண்டியவன்தானே. ஆனால் மன்னன் அவன் விரும்பிய பதவியை அளிப்பதாக அறிவித்தது மன்னனின் பலவீனத்தைத் தானே காட்டுகிறது? கலகங்கள் செய்து சேனாதிபதிப் பதவியை அடைய முயன்ற பலவீரன் அதை ஏற்காமல் நாட்டை விட்டே ஓடியது தவறுதானே? மேலும் தனக்கு உதவிய மர்க்கடகனை அவன் ஏன் கொன்றான்? இக்கேள்விகளுக்கு நீ சரியான விடை அளிக்காது போனால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''வீரசேன மன்னன் தனக்கு சேனாதிபதிப் பதவி அளிப்பதாக அறிவித்தது ராஜதந்திரமே என்பதை பலவீரன் புரிந்து கொண்டான். மன்னன் பிரமுகர்களையும் அதிகாரிகளையும் அவனிடமிருந்து மீட்கவே அவ்வாறு அறிவித்தான். பலவீரன் பண்பட்டவன் தர்பாரில் தன் நண்பர்கள் வெகுண்டு எழுந்த போது, அவர்களை அடக்கி வெளியே அழைத்துச் சென்றான். உணர்ச்சி வசப்பட்டு மார்க்கடகன் பேச்சில் மயங்கி வன்முறையில் இறங்கிய அவன் நன்கு யோசித்து அயல்நாட்டு மர்க்கடகன் வீரபுரியைக் கைப்பற்றவே கலகங்களைத் தூண்டி விட்டான் எனத் தெரிந்து கொண்டு நாட்டுப் பற்று கொண்ட அவன் மர்க்கடகனைக் கொன்றான். தான் கொலைக் குற்றம் புரிந்தவன் என்பதால் பதவி ஏற்கத்தகுதி பெற்றவனல்ல என்றும் கொலையாளி என்ற அவப் பெயர் பெற்று அவமானப்பட வேண்டுமே என எண்ணியே அவன் நாட்டை விட்டே ஓடி விட்டான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்தபதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# கோபு வளர்த்த நாய்க் குட்டி

கோபு மிகவும் கெட்டிக்காரப் பையன். படிப்பிலும் விளையாட்டுகளிலும் எல்லோரையும் முந்திவிடும் அவனைக் கண்டு அவனது பெற்றோர் மட்டுமல்லாமல் ஊராரும் அகமகிழ்ந்தார்கள். கோபு எல்லோரிடமும் இனிமையாகப் பேசி மரியாதையுடன் நடந்தும் வந்தான். அவன் ஒரு நாய்க்குட்டியை மிகவும் பிரியத்துடன் வளர்த்து வந்தான். அதன் பெயர் லியோ. அதனுடன் அவன் எப்போதும் விளையாடிக் கொண்டும் இருக்கலானான்.

அவனது தாயார் லட்சுமிக்கு கோபுவிடமுள்ள இரண்டு பழக்கங்கள் பிடிக்கவில்லை. ஒன்று தினமும் காலையில் நேரம் கழித்து படுக்கையிலிருந்து எழுந்திருப்பது. மற்றது அவன் தனது நாய்க் குட்டியை இஷ்டப்படி வீட்டிற்குள் எங்கும் சுற்றிச்சுற்றி வரவிட்டுவிடுவது. இப்படிச் செய்யாதே என்று அவள் கோபுவிடம் பலமுறை கூறியும் அவன் தன் பழக்கத்தை மாற்றிக் கொள்ளவே இல்லை.

லட்சுமி தினமும் அதிகாலையில் தான் எழுந்திருக்கும் போதே தூங்கிக் கொண்டிருக்கும் கோபுவைத் தட்டி எழுப்பிவிட்டுத் தன் வேலைகளைச் செய்யப் போய் விடுவாள். தாயார் எழுப்பியதும் எழுந்து படுக்கையில் உட்காரும் கோபு அவள் அங்கிருந்து போனதும் அவன் மறுபடியும் படுக்கையில் படுத்துப் போர்வையை இழுத்து தன்னை மூடிக் கொண்டுவிடுவான்.

ஒருநாள் லட்சுமி வாசல் தெளித்து கோலம் போட்டு பாத்திரங்களைத் தேய்த்து உள்ளே எடுத்து வந்து வைத்து விட்டு படுத்திருக்கும் கோபுவை மீண்டும் எழுப்பி "இப்படிப் படுத்துத் தூங்கினால் எப்போது நீ பள்ளிக்கூடம் போவது? எப்போது படிப்பது? போதாதற்கு ஒரு நாய்க் குட்டியை வேறு வைத்துக் கொண்டு விளையாடுகிறாய் முதலில் அந்த நாய்க்குட்டி இந்த வீட்டை விட்டுப் போனால்தான் நீ திருந்துவாய். நாளைக்கே

**சிந்து சங்கரன்**

நீ அதை ஊருக்கு வெளியே கண்காணாத இடத்தில் கொண்டு போய் விட்டு விட்டு வருகிறாயா அல்லது அதை நானே கொண்டு போய் விட்டு விட்டு வரட்டுமா?'' என்று எரிச்சலுடன் கேட்டாள்.

கோபுவும் ''வேண்டாம் அம்மா, அது இங்கேயே என்னுடன் இருக்கட்டும். நான் சொல்வதைக் கேள் அம்மா'' என்று கெஞ்சினான். லட்சுமியும் ''நான் சொல்வதை நீ கேட்பதில்லை. நீ சொல்வதை மட்டும் நான் கேட்க வேண்டுமோ? முடியாது. நாளைக்கு இந்தப் பிரச்சினைக்கு நான் சொன்னது தான் முடிவு'' என்று கூறிவிட்டுப் போனாள். கோபுவும் தன் நாய்க்குட்டியைத் தடவியவாறே கண்கலங்க ''அம்மா சொன்னதைக் கேட்டாயா? நான் அதிகாலையில் எழுந்திருக்க வேண்டுமாம். அப்படி எழுந்திருக்கா விட்டால் உன்னை விட்டு நான் பிரிந்தே இருக்க வேண்டுமாம்.'' என்று கூறினான்.

அன்றிரவு அவன் தன் நாய்க்குட்டியை விட்டு மறுநாள் பிரிய வேண்டுமே என்று எண்ணியவாறே தூங்கிவிட்டான். அவனது நாய்க்குட்டியும் அங்கேயே மூலையில் படுத்திருந்தது.

மறுநாள் அதிகாலையில் லட்சுமி எழுந்து தன் மகன் கோபுவை எழுப்பச் சென்றபோது அங்கு நடந்த அதிசயத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டாள். கோபுவை அவனது நாய்க்குட்டி 'லியோ' தூக்கத்திலிருந்து எழுப்பிவிட அவனும் எழுந்து படுக்கையைச் சுருட்டி எடுத்து வைத்துக் கொண்டிருந்தான்! அவன் தாயாரைக் கண்டதும் ''அம்மா! இன்று என்னை என் நாய்க்குட்டிதான் எழுப்பி விட்டது இனி மேல் அதுதான் தினமும் என்னை அதி காலையில் எழுப்பி விடும். நீ சொல்கிற படி நான் நடப்பதால் நீயும் என் நாய்க் குட்டியை என்னுடன் இருக்க அனுமதிக்க வேண்டும்.'' என்று வேண்டினான்.

அவனது தாயார் லட்சுமியும் ''உன் நாய்க்குட்டி மிகவும் நல்லது. பிராணிகளை நல்லவிதமாகப் பழக்கிவிட்டால் அது நாம் சொல்கிறபடி எல்லாம் நடக்கும் என்பதற்கு உன் நாய்க்குட்டியே ஒரு உதாரணம். உன் நாய்க்குட்டி நீ காலையில் வெகு நேரம் வரை தூங்கும் பழக்கத்தை மாற்றிவிட்டது. இப்படி நல்லதைச் செய்யும் உன் நாய்க்குட்டி நம்மோடு இருக்கட்டும்'' என்றாள்.

இதைக் கேட்ட கோபுவின் முகம் சூரியனைக் கண்ட தாமரை போல மலர்ந்தது.



## அன்று இம்மாதத்தில் பிறந்தவர்

பீஹார் மாநிலத்தில் 1884 டிசம்பர் 3ல் பிறந்த ஒரு குழந்தை வளர்ந்து இந்திய நாட்டின் முதல் குடியரசுத் தலைவரானது. அக்குழந்தைதான் புகழ் பெற்ற பாபு ராஜேந்திர பிரசாத்.

ராஜேந்திர பிரசாத் கல்கத்தா பல்கலைக் கழகத்தில் கல்வி பயின்று பீஹாரின் பாட்னாவிற்கு வந்தார். இவர் அங்கு தம் வழக்கறிஞர் தொழிலைத் தொடங்கி உயர் நீதி மன்றத்தின் மிகப் புகழ் பெற்ற வழக்கறிஞர் எனப் பெயர் பெற்றார். ஆனால் இவர் மனம் எப்போதும் தாய் நாட்டை பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து விடுவிப்பது பற்றியே சிந்தித்தது. 1917ல் இவர் மகாத்மா காந்தியுடன் தொடர்பு கொண்டு தம் மாநிலத்தின் சம்பானில் சத்தியாக்கிரகம் நடத்தினார். இவர் தமக்கு நல்ல வருமானத்தை அளித்து வந்த வழக்கறிஞர் தொழிலை விட்டு விட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்தார்.



### பாபு ராஜேந்திர பிரசாத்

விரைவிலேயே இவர் மாபெரும் தலைவர்களில் ஒருவராகக் கருதப்பட்டார். 1922ல் இந்திய தேசியக் காங்கிரசின் பொதுச் செயலாளராகி தம் திறமையை வெளிப்படுத்தினார். அதனால் இவரை காங்கிரஸ் 1934, 1939, 1947 ஆண்டுகளில் தன் தலைவராகத் தேர்ந்தெடுத்ததில் ஆச்சரியம் எதுவும் இல்லைதான்.

இந்திய அரசியல் நிர்ணய சபை 1946ல் அமைத்து இந்தியாவிற்கு அரசியல் சட்டங்களை வகுக்க ஆரம்பிக்கையில் இவர் அச்சபையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். நம் அரசியல் நிர்ணயச் சட்டத் தொகுப்பிற்கு இவர் ஆற்றிய பணி மகத்தானது. ஜவாஹர்லால் நேரு 1947ல் அமைத்த அமைச்சரவையில் இவர் ஒரு அமைச்சராக இருந்தார். 1950ல் புதிய அரசியல் சட்டம் அமலுக்கு வந்ததும் இவர் இந்தியக் குடியரசின் முதலாவது தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இவர் இப்பதவியில் இருந்தும் 1952ல் மீண்டும் அப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டும் 1957லும் தேர்ந்தெடுக்கப்பட்டு 1962 வரை அதனைத் திறன்படி வகித்தார். குடியரசுத் தலைவராகிவிட்ட போதிலும் இவர் ஏழை எளிய மக்களுடன் கலந்து பழகியவாறே இருந்தார். இவர் எப்போதும் ரயிலிலேயே சென்று ஆங்காங்கு மக்கள் கூடும் சிறிய பெரிய கூட்டங்களில் கலந்து கொண்டும் வந்தார்.

இவர் 1962ல் குடியரசுத் தலைவர் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற போது நம் நாட்டின் மிக உயரிய விருதான பாரதரத்தினத்தால் கௌரவிக்கப் பட்டார். 1963ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 28-ந்தேதி பாட்னாவில் இவர் அமரரானார். இவரைப்பற்றி கவிக்குயில் சரோஜினி தேவியிடம் புகழுரை எழுத வேண்டப்பட்டபோது ''இவரைப் பற்றி எழுத மை தேனாகவும் எழுதும் பேனா தங்கத்தாலும் இருக்க வேண்டும். இவரது நற்பண்புகளை விவரித்துக் கூற அத்தகைய பேனாவும் மையும் என்னிடம் இல்லையே'' என அழகுபடக்கூறினார்.



# வாராயோ மரணமே!

அளகாபுரியில் அளகேசன் என்ற வியாபாரி இருந்தான். அவன் நாணயஸ்தன், நேர்மையானவன் என்று பெயர் பெற்றிருந்தான். திடீரென அவன் இறந்து விடவே சற்றும் அனுபவமில்லாத இளம் வயதினனான அவனது மகன் ரத்தினம் வியாபாரத்தை கவனிக்கலா னான். ஆனால் வியாபாரம் ஆரம்பிக் கையில் அவன் கணக்குப் பார்த்த போது தந்தை வைத்து விட்டுப் போன பணத்தைவிட அவர் கடனாக விட்டுப் போன தொகையே அதிகமாக இருந்தது.

ரத்தினம் தந்தை வைத்து விட்டுப் போன கடனகளை எல்லாம் சிரமப் பட்டு அடைத்து விட்டு வியாபாரத் தைத் தொடர்ந்து நடத்தலானான். அதில் முதலில் லாபம் கிடைத் தாலும் பிறகு தொடர்ந்து நஷ்டமே வரலாயிற்று. அதைச் சரி செய்ய புதிய கடன்களை அவன் வாங்க வேண்டியதாயிற்று. கடன்காரர்கள் தாம் கொடுத்த பணத்தைத் திருப்பிக் கொடுக்கும்படி நெருக்கவே, அவன் பாடு திண்டாட்டமாகி விட்டது.

இந்த சிக்கலிலிருந்து மீள அவனுக்குத் தற்கொலை செய்து கொள்வதைத் தவிர வேறு ஒன்றும் தெரியவில்லை. காட்டிற்குப் போய் புலிக்கோ, சிங்கத்திற்கோ அல்லது வேறு எந்தக் கொடிய மிருக்கத்திற் கோ இரையாகி விடுவது என்று தீர்மானித்துக் கொண்டு அவன் நகரை விட்டுக் கிளம்பி அடர் காட்டிற்குள் சென்றான். வெகு தூரம் ஒரு ஒற்றையடிப் பாதையில் சென்று கொண்டிருந்த போது ஒரு புலி

சிவனார் செல்வன்



உறுமுவது அவன் காதில் விழுந் தது. அந்தப் புலிக்கு இரையாகி விடலாம் என்று அவன் எண்ணி அந்த உறுமல் கிளம்பிய இடத்தை நோக்கிச் சென்றான்.

அப்போது அங்கிருந்த புலி அவனைப் பார்த்து வேகமாகப் பாய்ந்து ஓடி வந்தது. தான் இனி இறக்கப் போவது உறுதி என்று எண்ணி அவன் கண்களை மூடிக் கொண்டு அசையாமல் நின்றான். ஆனால் புலி மரண ஒலி எழுப்பியது கேட்டு அவன் கண்களைத் திறந்து பார்க்கவே புலி ஒரு அம்பால் அடி பட்டுச் சுருண்டு வீழ்வது தெரிந்தது. இதென்ன விந்தை என்று அவன் சுற்றிலும் பார்த்த போது ஒரு வேடன் அங்கு ஓடி வந்து ''நல்லவேளை! தப்பித்தாய். இது மனித ரத்தத்திற்காக அலைந்து கொண்டிருந்தது. இன்று என் கையால் நல்லவேளையாக இறந்தது'' என்றான்.

அது கேட்டு ரத்தினம் ''நல்ல வேளையா? தப்பினேனா? இல்லை. நான் சாக வேண்டும் என்றுதானே இங்கே வந்தேன். நீ மட்டும் இந்தப் புலியைக் கொன்றிரா விட்டால் நான் இதற்கு இரையாகி இருப்பேனே. என் மரணத்தைத் தடுத்து விட்டா யே'' என்று சலித்துக் கொண்டு கூறினான். அது கேட்டு வேடன் ஆச்சரியப்பட்டு ''ஓ! நீ சாகவா இந்தக் காட்டிற்குள் வந்தாய்? புலி யைக் கொன்றது போல ஒரு அம் பால் என்னால் உன்னைக் கொன்று விடமுடியும். அப்படிச் செய்தால் கொலையாளி என்று அரசாங்க வீரர் கள் என்னைப் பிடித்துக் கொண்டு போய் விடுவார்கள். நீ இறக்க விரும்பினால் இதோ தெரியும் மலையின் உச்சிக்குப் போய் குதி. உன் உயிர் போய் விடும்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

ரத்தினமும் அந்த மலை மீது ஏறலானான் உச்சியை அடைய இருபது அடி இருக்கையில் அங்கு இரு காட்டு ஆடுகள் பயங்கரமாகச் சண்டை போட்டுக் கொண்டிருந்தன. அச் சண்டையால் ஒரு பெரிய பாராங்கல் பெயர்ந்து ரத்தினத்தைத் தாக்க உருண்டு வந்து கொண்டி ருந்தது. அது கண்டு பயந்து சற்று விலகினான். ஆனால் அந்தக் கல் ரத்தினத்தின் காலை காயப்படுத்தி

விட்டு உருண்டது. அதனால் அவன் மலை மீது ஏற முடியாமல் கீழே இறங்கி விட்டான். இரு முறை இறக்க முயன்றும் முடியாது போயிற் றே என்று எண்ணி இனி வேறு என்ன செய்யலாமென அவன் யோசித்துக் கொண்டே மெதுவாக நடந்தான்.

சற்று தூரத்தில் ஒரு பாம்புப் புற்றைக் கண்டதும் அவன் ''ஆம்! இதில் கண்டிப்பாக நல்ல பாம்பு இருக்கும். புற்றில் கை விட்டால் அந்தப் பாம்பு என்னை தீண்டும். அப்போது விஷம் என் உடலில் ஏற நான் இறந்து விடுவேன்'' என்று எண்ணி அந்தப் புற்றினருகே சென்று அதனுள் கையை விட்டான். ஆனால் அதில் நல்ல பாம்பு இருக்க வில்லை. வேறு ஏதோ ஒன்று கை யில் தட்டுப் படவே அவன் அதை எடுத்துப் பார்த்தான். அது விலையுயர்ந்த ராஜமுத்திரை மோதிரம். அதைத் தன் விரலில் அணிந்து கொண்டு வழி நடந்தான்.

கொஞ்ச தூரம் போனதும் இரு அரசாங்க வீரர்கள் அவனைப் பிடித்து ''உனக்கு இந்த மோதிரம் எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்டார்கள். அவனும் தான் தற்கொலை செய்து கொள்ள முயன்று பாம்புப்புற்றில் கை விட்ட போது அங்கிருந்து அம் மோதிரத்தை எடுத்ததாகக் கூறினான். ஆனால் வீரர்கள் அவன் கூறியதை நம்பாமல் அரசன் முன் கொண்டு போய் நிறுத்தி ''இவன் தான் அரண் மனையிலிருந்து நகைகளைத் திருடி யவன். நகைகளோடு இவன் திருடிய ராஜமுத்திரை மோதிரம் இவன் கைவிரலில் உள்ளது'' என்றனர்.

மன்னனும் ரத்தினத்திடம் ''நீ என்ன சொல்ல விரும்புகிறாய்?'' என்று கேட்டான். அவனும் ''அரசே! நான் எதையும் திருட





வில்லை. நான் தற்கொலை செய்து கொள்ளும் முயற்சியில் ஒரு பாம்புப் புற்றில் கை விட்ட போது அங்கிருந்துதான் இதை எடுத்தேன். நான் ஒரு வியாபாரியின் மகன். என் தந்தை இறந்த பின் அவர் செய்து வந்த வியாபாரத்தைத் தொடர்ந்து செய்தேன். அதில் நஷ்டம் ஏற்பட்டு கடன் வாங்கித் தொல்லைகளைத் தாங்க முடியாமல் தற்கொலை செய்து கொள்ள எண்ணி காட்டிற்குள் போய் எந்தக் கொடிய மிருகத்திற்காவது இரையாவது என்று அங்கும் சென்றேன். ஒரு புலி என் மீது பாய வந்த போது ஒருவன் அதைக் கொன்று விட்டான். நான் என்னைப் பற்றி விளக்கியபோது மலையின் உச்சிக்குப் போய் அங்கிருந்து குதித்து உயிர் விடுமாறு கூறினான். நான் மலையின் உச்சிக்குப் போகையில் ஒரு கல் உருண்டு வந்து என் காலைப் படு காயப் படுத்தியது. அதனால் மலையின் உச்சிக்குப் போக முடியாமல் திரும்பி விட்டேன். அதன் பின் அடுத்த முயற்சியாக வழியில் கண்ட பாம்புப்புற்று ஒன்றில் கையை நுழைத்தேன். அதில் பாம்பு இருக்கவில்லை. இந்த மோதிரம் தான் கிடைத்தது. இதை யாரோ அந்தப் புற்றில் போட்டிருக்கிறார்கள் . நான் மூன்று முறை முயன்றும் துரதிர்ஷ்டவசமாக நான் சாக முடியவில்லை. இம் முறை யாவது நான் சாகிறேனா என்று பார்க்கிறேன்'' என்று கூறியவாறே அரண்மனையின் அந்த மாடியிலிருந்து கீழே குதித்து விட்டான். அது கண்டு மன்னன் திகைத்து நின்றான்.

மாடியிலிருந்து குதித்த ரத்தினம் தரை மீது விழாமல் அப்போது அவ்வழியே வந்து கொண்டிருந்த ஒரு குதிரை வீரனின் மீது விழுந்தான். குதிரை மிரண்டு ரத்தினத்தையும் அந்தக் குதிரை வீரனையும் கீழே தள்ளிவிட்டு ஓடியது. ரத்தினத்திற்கு காயம் ஏற்படவில்லை. குதிரை வீரன் தான் படுகாயமுற்று விழுந்து கிடந்தான். அவனுக்கு சிகித்சை அளிக்க மருத்துவ மனைக்கு வீரர்கள் அவனை கொண்டு செல்லத் தூக்கினார்கள். அப்போது அக்குதிரை வீரனின் ஆடையிலிருந்து ஒரு கடிதம் கீழே விழுந்தது. அது அண்டை நாட்டு

மன்னன் பரந்தாமனுக்கு அனுப்ப அக்குதிரை வீரன் எழுதி வைத்திருந்த கடிதம். நாட்டின் படை பலம் பற்றிய முழுவிவரங்கள் அண்டை நாட்டு மன்னனுக்குத் தெரிவிக்க அதில் எழுதப் பட்டிருந்தன.

இதைப் படித்த அளகாபுரி மன்ன னுக்கு அந்தக் குதிரை வீரன் அண்டை நாட்டு மன்னனின் ஒற்றனாகப் பணி புரிந்து வருகிறான் என்று தெரிந்து விட்டது. அந்தக் கடிதம் மட்டும் அண்டை நாட்டு மன்னனுக்குச் கிடைத்திருந்தால் அவன் படை எடுத்து வந்து எளிதில் அளகாபுரியைக் கைப்பற்றி தன்னையும் சிறைப் படுத்தி இருப்பான் என்று அளகாபுரி மன்னன் தெரிந்து கொண்டான். உடனே துரோகியான அக்குதிரை வீரனைச் சிறையில் அடைக்கும்படிக் கட்டளை இட்டான்.

இதன் பிறகு மன்னன் ரத்தினத்தை அழைத்து ''ரத்தினம்! நீ மனம் தளர்ந்து வியாபாரம் செய்ய விரும்பாமல் தற்கொலை செய்து கொள்ள நான்கு முறை முயன்றாய். ஆனால் உன்னால் இறக்க முடிய வில்லை. கவலைப் படாதே. நாடு இந்த எதிரியின் கையில் சிக்கி விடா மலிருக்க மாபெரும் உதவியைச் செய்திருக்கிறாய். தொலைந்து போன என் முத்திரை மோதிரத்தைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து தந்திருக்கிறாய். உனக்கு நான் லட்சம் வராகன்கள் கொடுக்கிறேன். அதைக் கொண்டு உன் கடன்களை அடைத்து விட்டு மீண்டும் வியாபாரத்தைத் தொடங்கு. லாபமே கிடைக்கும். இனி மரணத்தை ஒரு போதும் அழைக்காதே.'' என்று கூறி லட்சம் வராகன்கள் கொடுத்து அனுப் பினான்.

ரத்தினமும் தன் கடன்களை எல்லாம் தீர்த்துவிட்டு நல்லபடியாக வியாபாரம் செய்து நிறைய லாபமும் அடைந்தான்.





# இருவரில் யார்?

வீரபுரஜமீனில் பொக்கிஷ அதிகாரியாக பாலசுந்தரம் பணிபுரிந்துவந்தார். அவரின் கீழ் இரு இளைஞர்களான ராமநாதனும் சோமநாதனும் பணியில் இருந்தார்கள். அவர்களில் ஒருவனைத் தன்மகள் சாந்தாவுக்குத் திருமணம் செய்து வைத்து விடலாம் என்று பாலசுந்தரம் எண்ணினார். இருவரிடமும் எந்தக் கெட்டபழக்கமும் இல்லை. பார்க்கவும் அழகானவர்கள். ஆனால் குணம் தான் மாறுபட்டிருந்தது.

ராமநாதன் எல்லோருடனும் கலகலப்பாகப் பேசுபவன். நல்ல ஆடைகளை அணிந்து தாராளமாகச் செலவு செய்பவன். சம்பாதிப்பதில் அவன் எதுவும் சேமித்து வைத்துக் கொள்வதில்லை என்று ஊரில் பரவலாகப் பேச்சும் இருந்தது.

சோமநாதன் யாருடனும் அதிகமாகப் பேசுவதில்லை. யாராவது ஏதாவது கேள்விகேட்டால் முகத்தைத் திருப்பிக் கொண்டு ஆமாம், இல்லை என்று தான் பதில் சொல்வான். ஆடைகளைத் துவைத்துக்கூடக் கட்டமாட்டான். பணமும் செலவு செய்ய மாட்டான். அவன் நிறையச் சேர்த்து வைத்திருக்கிறான் என்று ஊரில் எல்லோரும் கூறி வந்தார்கள்.

ஒருநாள் மாலை பாலசுந்தரம் தன் மகளிடம் ''சாந்தா! என் அலுவலகத்தில் பணிபுரியும் ராமநாதனையும் சோமநாதனையும் நீ ஜமீன்தாரரின் பிறந்த நாள் விழாவில் பார்த்திருக்கிறாயே அவர்களில் உனக்கு யாரைப் பிடித்திருக்கிறது என்று கூறினால் அந்த இளைஞனையே உனக்கு மணம் செய்து வைக்கிறேன்''

- எஸ். சோபினி

என்றார். சாந்தாவும் ''அப்பா! நான் அந்த இருவரையும் பார்த்தும் இருக்கிறேன். இருவரைப்பற்றியும் விவரமாகக் கேட்டும் இருக்கிறேன்'' என்றாள். அப்போது பாலசுந்தரம் ''அப்படியானால் நீ யாரை மணக்க விரும்புகிறாய்?'' என்று கேட்டார்.

சாந்தாவும் ராமநாதனைத்தான் என்றதும் பாலசுந்தரம் ஆச்சரியப்பட்டவராய் ''ராமநாதனையா? அவன் தான் தான் வாங்கும் சம்பளத்தைக் கண்டபடி செலவு செய்து விடுகிறானே. சோமநாதனோ சிக்கனமாக வாழ்ந்து பணத்தை சேர்த்து வருகிறான். நன்றாக யோசித்துப் பார். இவர்களில் யார் தகுந்தவன்?'' என்று சொன்னார். சாந்தாவும் ''நன்றாக யோசித்து விட்டேன், அப்பா. ராமநாதனுக்கு இப்போது யாருக்குச் செலவு செய்வது என்ற பிரச்சினை இல்லை. அதனால் யார் கேட்டாலும் தாராள மனதுடன் கொடுக்கிறார். அவருக்குத் திருமணமாகிவிட்டால் மனைவிக்காக நன்கு செலவு செய்வார். சோமநாதன் அப்படிச்செய்வாரா என்பது சந்தேகமே. நீங்கள் வேண்டுமானால் நான் சொல்கிறப்படி அவர்களைப் பரீட்சித்துப் பாருங்கள். அப்போது யாரைத் தேர்ந்தெடுப்பது என்பது உங்களுக்கு தெரிந்து விடும்'' என்று கூறி என்ன பரீட்சை வைக்க வேண்டும் என்பதனையும் விவரமாகக் கூறினாள்.

மறுநாள் மாலை பாலசுந்தரம் மாலையாகியும் வெகுநேரம் வரைக்கும் இருக்கையில் கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தார். அதைக் கண்ட ராமநாதன் அவரை அணுகி ''வீட்டிற்குக் கிளம்பவில்லையா? ஏன் கவலையுடன் இருக்கிறீர்கள்?'' என்று கேட்டான். அவரும் ''என் பெண் கல்யாணத்திற்கு இருக்கிறாளே. கவலைப்படாமல் இருக்கமுடியுமா? ஒரு நல்லவரன் கிடைத்திருக்கிறான். ஆனால் வரதட்சிணையாக இருபதாயிரம் ரூபாய் கேட்கிறான். இப்போது யாராவது கொடுத்து உதவினால் சாந்தாவின் கல்யாணத்தை முடித்துவிட்டு மூன்று மாதத்தில் அந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுவேன். யாரிடம் போய் பணத்தைக் கேட்பது என்று தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார்.



ராமநாதனும் ''உங்கள் பெண்ணை

மணந்து கொள்ளப் போட்டி போட்டுக் கொண்டு வருவார்கள். நல்லவரன் கிடைக்கும் போது விட்டுவிடக்கூடாது. உங்களுக்கு இருபதாயிரம் தானே வேண்டும்? இன்னும் மூன்றே நாட்களில் பணம் கொண்டு வந்து கொடுக்கிறேன். கவலைப்படாமல் மற்ற ஏற்பாடுகளைச் செய்யுங்கள்'' என்றான். அப்போது பாலசுந்தரம் ''உன்னிடம் அவ்வளவு பணம் ஏது? நீ தான் கண்டபடி செலவு செய்து வருகிறாயே'' என்று கேட்டார்.

ராமநாதனும் ''என்னிடம் அவ்வளவு பணம் இல்லைதான். நான் எவ்வளவோ பேர்களுக்குப் பணஉதவி செய்திருக்கிறேன். நான் பணம் கேட்டால் இல்லை என்று சொல்லாமல் கண்டிப்பாகக் கொடுப்பார்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றான். பாலசுந்தரமும் மெதுவாக எழுந்து போய் சோமநாதனிடம் ''சோமநாதா! என் பெண்ணின் விவாகம் நிச்சயம் செய்ய மாப்பிள்ளை வீட்டார் கேட்கும் இருபதாயிரம் ரூபாயை வரதட்சிணையாகக் கொடுக்க வேண்டும். உன்னிடம் தான் பணம் இருக்கிறதே. எனக்கு இப்போது இருபதாயிரம் கொடு. மூன்று மாதத்தில் அதை நான் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்'' என்றார்.

சோமநாதனும் ''நான் யாருக்கும் கடன் கொடுப்பதில்லை. மேலும் என்னிடம் கடன் வாங்கி நீங்கள் ஏன் இப்போது உங்கள் மகளின் திருமணத்தை நடத்த வேண்டும்? இன்னும் மூன்று மாதத்தில் உங்களுக்குப் பணம் கிடைத்துவிடும் என்றால் அப்போது நானே உங்கள் மகளை மணந்து கொள்கிறேன், எனக்கு அந்த இருபதாயிரத்தை வரதட்சிணையாகக் கொடுத்து விடுங்கள்'' என்றான். பாலசுந்தரமும் மனதிற்குள் சிரித்துக் கொண்டே தம் வீட்டை அடைந்தார்.

அவர் சாந்தாவை அழைத்து ''நீ செய்த முடிவுதான் சரி. உன் கெட்டிக்காரத் தனம் எனக்கு இல்லைபார்'' என்றார். விரைவிலேயே சாந்தாவுக்கும் ராமநாதனுக்கும் திருமணம் இனிது நடைபெற்றது.





# செயற்கரிய செயல்

வெகுகாலத்திற்கு முன் ஜப்பானில் ஒரு ஜமீன்தாரர் இருந்தார். அவராக எதுவும் சம்பாதித்து தம் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ளவில்லை. முன்னோர் விட்டுப் போன சொத்துதான் அவரிடம் இருந்தது. அதனால் அவர் என் முன்னோர்கள்களைப் போல யாரும் மகத்தான செயல்களைப் புரிந்தில்லை'' என்று கூறிப் பெருமையடித்து கொண்டு வரலானார்.

அவரது மனப் போக்கைப் புரிந்து கொண்டபலர் தினமும் வந்து அவரைக் கண்டு அவர்கள் செய்யாத செயல்களை எல்லாம் செய்ததாகக் கூறி தமக்கு ஆக வேண்டியவற்றைச் செய்து கொண்டார்கள். ஒருவர் அவரது தாத்தா மன்னரையே எதிர்த்தவர் என்பார். இன்னொருவரோ அவரது கொள்ளுத்தாத்தா மாபெரும் பண்டிதர் எனப் புகழ்வார். இன்னொருவரோ ''உங்கள் தாத்தாவின் தாத்தா எவ்வளவு அழகானவர் தெரியுமா? அவரை மணந்து கொள்ள தேவலோகத்து அப்சரப் பெண்கள் போட்டி போட்டுக் கொண்டு வந்தார்கள்'' என்பார் இதைத் தொடர்ந்து இன்னொருவர் ''நீங்களும் அவரைப் போல அழகாக இருக்கிறீர்கள். உங்களை மணந்து கொள்ள இப்போது தேவலோகத்திலிருந்து அப்சரப் பெண்கள் வந்து விடுவார்கள்'' என்பார்.

இதையெல்லாம் கேட்டு ஜமீன்தாரர் பூரித்துப் போவார். ''ஆமாம். என் முன்னோர்களைப் போல யாருமே இருந்திருக்கமுடியாது. யாராலும் அவர்கள் செய்த செயல்களைச் செய்யவும் முடியாது'' என்று கூறி அவர் மீசையை முறுக்கி விட்டுக் கொள்வார்.

அப்போது ஒருவர் ''யாராவது ஒருவர் உங்கள் முன்னோர்களின் செயல்களை மிஞ்சும் ஒரு செயலைச் செய்திருந்தாக உங்களிடம் வந்து கூறினால் நீங்கள் என்ன செய்வீர்ள்?'' என்று கேட்டார். ஜமீன்தாரரும் ''அவனுக்கு நூறு பொற்காசுகள் பரிசாக அளிப்பேன்'' என்றார். இச்சமயத்தில் ஒரு ஏழைவிவசாயி அங்கு வந்தான்.

சா. கௌரி

அவன் ஜமீன்தாரரிடம் ''உங்கள் கணக்கர் என் நிலத்திற்கு வரியாக ஒரு வெள்ளிக்காசு செலுத்தச் சொல்கிறார். இது மிக அதிகம். நீங்கள் குறைத்து உத்தரவு போடுங்கள்'' என வேண்டினான்.

ஜமீன்தாரரும் ''ஒரு வெள்ளிக்காசுக் காகவா இப்படிக் கதறுகிறாய்? என் முன்னோர்களில ஒருவர் செய்த மிக மகத்தான செயல் ஒன்றைச் சொல். நூறு தங்கக்காசுக்களைப் பரிசாகப் பெறும் வாய்ப்பினை நீ அடைவாய்'' என்றார். அப்போது அவன் ''உங்கள் தாத்தாவின் தாத்தா செய்த ஒரு மகத்தான செயலைக் கூறுகிறேன். அதைப்போல எந்த ஜமீன் தாரரோ, மன்னரோ அல்லது உங்களது முன்னோர்களில் ஒருவர் கூடச் செய்தி ருக்க முடியாது'' என்றான். ஜமீன் தாரரும் ''அதை நீ மிக உயர்வானதாகக் கூறிவிட்டால் மட்டும் நான் ஏற்கமாட் டேன். அது மிக உயரிய செயல் என்று நான் உணர வேண்டும்'' என்றார்.

குடியானவனும் ''நீங்கள் கூறுவதே சரி, நியாய அநியாயங்களைப் பற்றி முடிவு செய்ய நான் யார்?'' என்றான். ஜமீன்தாரரும் ''சரி, நீ சொல்'' எனவே அவனும் கூறலானான். ''உங்கள் தாத்தாவின் தாத்தா எல்லா ஜமீன்தாரர் களை விட மிகமிகப் பெரியவர். அவர் ஒருநாள் தம்பல்லக்கில் தொலைதூரத் திலுள்ள ஆலயத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். உச்சிவேளையின் போது பல்லக்கு ஒரு ஆலமரத்தடியை அடைந்தது. ஜமீன்தாரர் அங்கு இறங் கிச் சற்று ஓய்வு எடுத்துக் கொள்ள விரும்பினார். அவ்வாறு எண்ணி அவர் அம்மரத்தடியே நின்றபோது அவ்வழி யே சென்ற வழிப்போக்கன் ஒருவன் அவரிடம் ''ஐயா! இந்த மரத்தின் மேல் பல பறவைகள் உள்ளன அவை எச்சமிட்டு உங்களது ஆடைகளைப் பாழாக்கி விடும். எனவே வேறு எங்கா வது போய்த் தங்கி இளைப்பாறுங்கள்'' என்றான்.



ஜமீன்தாரரோ ''சீச்சீ! நான் இந்தப் பகுதிக்கே எஜமானன், இந்தப் பறவைகளுக்குப் பயந்து வேறு எங்காவது ஏன் போக வேண்டும்?'' என்றார்.

விவசாயி சொன்ன இந்த சம்பவத்தைக் கேட்ட ஜமீன்தாரரும் ''ஆம் இது எங்கள் வம்சத்தவரின் இயல்பே. முன் வைத்த காலை எக்காரணம் கொண்டும் அவர்கள் பின் வைக்கவே மாட்டார்கள்'' என்றார் பெருமைததும்ப.

விவசாயி மீண்டும் தொடர்ந்து கூறலானான். ''சற்று நேரம் கழிந்தது. ஜமீன்தாரரின் சட்டைமீது ஒரு பறவை இட்ட எச்சம் விழுந்தது. உடனே ஜமீன்தாரர் அந்தச்சட்டையைக்கழற்றிவிடடு புதுச்சட்டை ஒன்றைக் கொண்டு வரச் சொல்லி அதைப் போட்டுக்கொண்டார். சற்றுநேரத்திற்குப்பின் இன்னொரு பறவை அவர் போர்த்திருந்த சால்வை மீது எச்சமிட்டுவிட்டது. அவரும் அச்சால்வையை எடுத்து தூரவைத்து விட்டு வேறொரு சால்வையை கொண்டுவரச் சொல்லி அதைப் போர்த்திக் கொண்டார்''.

இவ்வாறு அந்த விவசாயி கூறியதும் ஜமீன்தாரர் ''பார்த்தாயா! இது தான் எங்கள் பரம்பரை பரம்பரையாக வரும் இயல்பு'' என்றார் தலை நிமிர்த்திச் சுற்றிலும் பார்த்தவாறே.

விவசாயியும் தொடர்ந்து ''இன்னொரு பறவை அவரது செருப்பில் எச்சமிடவே அவர் செருப்புகளைத் தூக்கி எறிந்து விட்டு புதுச் செருப்புகளை வரவழைத்துப் போட்டுக் கொண்டார்''. எனவே ஜமீன்தாரரும் ''அவர் அப்படித்தான் செய்திருப்பார் என்று எனக்குத் தெரியும்'' என்றார். அப்போது அந்த விவசாயி ''இன்னமும் கேளுங்கள் கொஞ்ச நேரமானதும் இன்னொரு பறவை உங்கள் முன்னோரான ஜமீன்தாரரின் தலை மீது எச்சமிட்டது. உடனே அவர் ''என் இந்தத் தலையை வெட்டி எறிந்து விட்டு புதுத தலையை வையுங்கள்.'' என்று கத்தினார்'' என்றான்.

ஜமீன்தாரரும் ''இதை நம்பச் சொல்கிறாயா?'' எனக் கேட்கவே விவசாயியும் ''அதெல்லாம் எனக்கு தெரியாது. இது மாபெரும் அரிய செயலே. யாரும் செய்யாதது'' எனக் கூறி பரிசை வாங்கிக் கொண்டு சென்று விட்டான்.

ஜமீன்தாரர் திகைத்துப் போனார்.



இது அம்புலிமாமாவின் பரிசு

# பரோபகாரி பழனி

## ராட்சஸன் தொல்லை!

ஓவியம் : பாணி






ஒருவன் ஒரு கழுதையையும் ஒரு ஆட்டையும் கட்டி ஓட்டிக் கொண்டு வந்தான். கழுதை மீது சோற்று மூட்டையும், சுடப்பட்ட கோழியும் இருக்க அவன் கழுதையை ஒரு குகையின் பக்கமாக ஓட்டிச் சென்றான்.

என்ன நடக்கிறதெனத் தெரிந்து கொள்ள பழனி அம்மனிதனை அணுகினான்.

''குகையில் யார் இருக்கிறார்கள்? இவ்வளவு உணவையும் உள்ளே அனுப்பி விட்டு நீ ஏன் வெளியே நிற்கிறாய்?''

''எல்லாம் தினமும் நடப்பதே. எங்கள் கிராமத்தின் தொல்லை என்றுதான் ஒழியுமோ?''

உன் கிராமத்திற்கு என்ன தொல்லை? சொல். அதை நான் போக்குகிறேன்.

அது அவ்வளவு எளிதல்ல, ஐயா, இவ்வூர் மந்திரவாதி பொன்னைய்யனை விழுங்கிய ராட்சஸனை உம்மால் என்ன செய்ய முடியும்? இக்குகை ராட்சஸன் முன்பெல்லாம் மனிதர்களைப் பிடித்து விழுங்கி வந்தான்.





அவனுக்கு பயந்து ஊரார் ஊரை விட்டு ஓடினார்கள். ஒரு வருடத்திற்குப் பின் அவர்கள் திரும்பி வந்து நிம்மதியாக வாழலானார்கள். ஆறு மாதங்களுக்குப்பின் கிராமத்து ஆடுகளும், கோழிகளும் மாயமாய் மறையலாயின. மந்திரவாதி பொன்னையனின் சீடர்கள் மலை மீது பனைமர உயர முள்ள ஒரு ராட்சஸனைப் பார்த்தார்களாம். பொன்னையன் தனியாக குகைக்குள் போய் ராட்சஸனிடம் பேசி அவன் ஊருக்குத் தொல்லை கொடுக்கக் கூடாதென்றும் ஊரார் முறை போட்டுக் கொண்டு அவனுக்கு உணவு அனுப்புவார்கள் என்றும் அவன் ஊருக்குள் வரக் கூடாது என்றும் ஏற்பாடு செய்து கொண்டு வந்தான்.






ஒரு நாள் பொன்னைய்யனின் குடும்பமும் அவனது சீடர்களின் குடும்பமும் வெளியூர் கோவிலுக்குப் போவதாகக் கூறி புறப்பட்டன. ஆனால் போனவர்கள் திரும்பி வரவே இல்லை. மலையின் பக்கமாகப் போன அவர்களை ராட்சஸன் பிடித்துத் தின்று விட்டான் என்ற சந்தேகம் ஏற்பட்டது. பொன்னைய்யன் கோபம் கொண்டான்.
பேய்களையும் பிசாசு களையும் நடு நடுங்க வைத்த நானா இந்த ராட் சஸனைச் சும்மா விட்டு விடுவேன்? பார்க்கி றேன் ஒரு கை!


பொன்னைய்யன் தன் நான்கு ஆட்களுடன் ஆவேசமாக குகைக்குள் சென்றான். ஆனால் அவர்கள் யாரும் திரும்பி வரவில்லை.


"அவர்களையும் ராட்சஸன் தான் விழுங்கி இருக்க வேண்டும். அப்போது முதல் தினமும் ராட்சஸனுக்கு உணவு அனுப்பி வருகிறோம். எல்லாம் எங்கள் விதி"


ஒரேயடியாக நான்கு குடும்பங்களை விழுங்கிய ராட்சஸன் ஒரு ஆடு ஒரு கோழியைத் தின்று திருப்தி அடைந்து விடுவானா? பழனி இதை நம்பவில்லை. இது ராட்சஸன் பெயரைச் சொல்லி பொன்னைய்யனும் அவனது சீடர்களும் ஆடும் கபட நாடகமே என்று அவன் எண்ணினான்.
பொன்னைய்யனையும் அவனது ஆட்களையும் ராட்சஸன் தின்ற பிறகு என்றாவது யாராவது அந்த ராட்சஸனைப் பார்த்தீர்களா?
"இல்லை. பொன்னைய்யன், செய்தது நல்ல ஏற்பாடு என ராட்சஸன் இப்போதும் அதையே கடைப்பிடித்து வருகிறான்"
பழனி இனிச் செய்ய வேண்டியதற்காக கிராமத்திற்குச் சென்றான்.

அன்றிரவு பழனி மை இருட்டில் மலைக்குள் போய் குகையின் வெளிப் புறத்தை நன்கு பார்த்துவிட்டு அங்கு உட்கார்ந்தான். குகைக்குள் யார் யாரோ பேசுவது காதில் விழுந்தது.



பூனை போல் அவன் குகைக் குள் எட்டிப் பார்த்தான். மங் கிய விளக்கொளியில் சிலர் மாமிசத்தைக் கடித்துத் தின்ப தை அவன் பார்த்தான். ராட்ச ஸனே அங்கு இல்லை. சந்தடி செய்யாமல் பழனி கிராமத் திற்குத் திரும்ப வந்தான்.



மறுநாள் காலையில்






எல்லோரும் சேர்ந்து குகை யருகே சென்று குகை வாசலில் ஈரக் கட்டைகளைப் போட்டு நெருப்பு மூட்டினார்கள்.

புகை குகைக்குள் செல்லவே குகைக்குள்ளிருந்து மூச்சுத் திணறி பொன்னைய்யனும் அவனது ஆட்களும் வெளியே ஓடி வந்தார்கள். அவர்களைக் கண்டு ஊரார் ஆச்சரியப்பட்டனர். பொன்னைய்யனோ இனி தான் அவ்வூரில் இருக்க முடியாதெனக் கண்டு தன் சீடர்களுடன் எங்கோ ஓடி விட்டான்.







பழனி அவ்வூராரிடம் விடை பெற்றுக் கொண்டு தன் நாயுடன் வேறொரு கிராமத்தை நோக்கிச் சென்றான்.

அடுத்த மாதம் இன்னொரு துணிச்சல் கதை




# தொட்டால் தங்கம்

ஒரு வியாபாரிதன் ஒரே மகனுக்காக ஏராளமாகப் பணத்தைச் சேர்த்துக் கொண்டே இருந்தான். அவன் சுகமாக இருக்க நன்கு செலவும் செய்து வந்தான். அவன் தன் மகனின் சுகத்தைத்தான் முக்கியமானதாகக் கருதினான். இப்ப டியே சில ஆண்டுகள் கழிந்தன.

முடிவில் வியாபாரி முதுமை காரண மாகப் படுத்து விட்டான். இனிதான் பிழைக்கப் போவதில்லை என உணர்ந்து அவன் தன் மகனை அருகே அழைத்து ''மகனே! நீ சுகமாக வாழ வேண்டும். எனவே நான் இறக்கும் இச்சமயத்தில், நீ எதைத் தொட்டாலும் அது பொன் னாகும் என்று ஆசி கூறுகிறேன்'' என்று சொல்லி ஒரேயடியாகக் கண்ணை மூடி விட்டான்.

வியாபாரியின் மகன் தன் தந்தை இறந்து போனதால் துக்கத்தில் சில நாட்களைக் கழித்தான். அதன் பின் அவன் வியாபாரத்தில் ஈடுபடவே ஒவ்வொரு வியாபாரத்திலும் அவனுக்கு நல்ல லாபம் கிடைத்துக் கொண்டே இருந்தது. இப்படி தனக்கு லாபம் கிடைத்துக் கொண்டே இருக்கக் காரணம் இறக்கும் முன் தன் தந்தை செய்த ஆசீர் வாதம் தான் என்று அவன் நம்பினான்.

ஆனால் இப்படி ஒரேயடியாக அதிர்ஷ்டம் கிட்டி வருவது மிகவும் ஆபத்தானது என்று அவன் மனம் எண்ண லாயிற்று. அவ்விதம் ஏதாவது விபரிதம் நேராதிருக்க என்ன செய்யலாம் என்று யோசிக்கலானான். பண்டங்களை அதிக விலை கொடுத்து வாங்கி அவற்றைக் குறைந்த விலைக்கு விற்றால் தன்னிட முள்ள பணம் சற்று குறையும் என்று அவன் எண்ணினான். அவன் எண்ணுவது சரியல்ல என்று அவனது நண்பர்களும் முதியவர்களும் அறிவுரை கூறியும் அவன் அதைப் பொருட்படுத்தவில்லை.

தான் எண்ணியபடிதன் நாட்டில் மிக அதிகவிலையில் விற்ற பேரீச்சம்பழத் தை மூட்டை மூட்டையாக வாங்கி எடுத் துக் கொண்டு அது மிகவும் மலிவாக

சங்க.வெங்கடாசலம்

விற்கப்பட்ட நாடான எகிப்திற்குப் போய் அவன் மிக மிகக் குறைந்த விலைக்கு அதை விற்கலானான். அதைக் கண்ட அந்நாட்டு மக்களும் கை கொட்டிச் சிரித்தார்கள். அந்த விசித்திர வியாபாரியைப் பற்றி எகிப்திய மன்னனுக்குத் தகவல் எட்டவே அவன் தன் அதிகாரிகளிடம் ''யார் இந்த அதிசயப் பேர்வழி? அவனை நான் பார்க்க வேண்டும்'' என்றான். அதிகாரிகளும் அவன் வியாபாரம் செய்யும் இடத்திற்கு மன்னனை அழைத்துச் சென்றார்கள்.

மன்னன் அந்த இளம் வியாபாரியைப் பார்த்து ''யாரப்பா நீ? எங்கிருந்து வந்து பைத்தியக்காரத்தனமாக நஷ்டத்தில் வியாபாரம் செய்கிறாய்? என்று கேட்டான். அவனும் ''அரசே! என் தந்தையின் ஆசீர்வாதத்தால் நான் எதைத் தொட்டாலும் தங்கமாகி விடுகிறது. இந்த மாதிரி அதிர்ஷ்டம் மழை போல என் மீது பொழிவது சரியல்ல என்று எண்ணியே அதைக் குறைக்க முயன்று வருகிறேன்'' என்றான்.

அது கேட்டு மன்னன் ''இதை நான் நம்ப மாட்டேன்'' எனவே அந்த வியாபாரியின் மகன் தான் நின்ற இடத்திலிருந்து ஒரு பிடி மண்ணை எடுத்துக் கொஞ்சம் கொஞ்சமாகக் கீழே உதிர்க்கலானான். அப்போது ஆச்சரியம் விளைவிக்கும் வகையில் ஒரு மோதிரம் இருந்தது. மன்னனும் என்ன அது என்று கேட்கவே அவனும் ''யாரோ ஒரு அரசரின் முத்திரை மோதிரம் போல் தெரிகிறது'' என்று கூறி அதை மன்னனிடம் கொடுத்தான்.

அதைப் பார்த்த மன்னன் ''ஆ! இது என் காணாமல் போன முத்திரை மோதிரம். இது ஒரு வருடத்திற்கு முன் தொலைந்து போயிற்று. இதைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து தருபவர்களுக்கு என் ஒரே மகளைத் திருமணம் செய்து வைத்து எனக்குப் பின் அவனே இந்நாட்டு அரசனாவான் என்று அறிவித்திருந்தேன். அதன்படியே நடக்கிறேன். உன் தந்தையின் ஆசீர்வாதம் உண்மையிலேயே பலிக்கிறது'' என்றான்.

விரைவிலேயே வியாபாரியின் மகனுக்கும் எகிப்து நாட்டு இளவரசிக்கும் திருமணம் நடைபெற்றது. அந்த எகிப்திய மன்னனுக்குப் பிறகு வியாபாரியின் மகனே எகிப்தின் மன்னனானான்.



# இந்தியப் பண்பாடு

**ஒரு நாகரீகத்தின் உயரிய கட்டங்கள்**
**பரம்பரைபரைம்பரையாக உண்மையைக்காண ஆய்வு**

## 10. மரணத்தை வென்ற காதல்!



அன்று சேகரின் பிறந்த நாளை விழாவாகக் கொண்டாட அவனது நண்பர்கள்யாவரும் அவனது வீட்டின் முன்புறமுள்ள தோட்டத்தில் கூடினார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தாம் கொண்டு வந்த பரிசுகளை சேகரிடம் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அப்போது சோமநாதர் அங்கு வந்தார் அவரைக் கண்ட சியமாளா ''ஆ! தாத்தா வந்து விட்டார். அவர் சேகருக்கு அருமையான பரிசை அளிக்கப் போகிறார்'' என்று புன்னகை புரிந்தவாறே கூறினாள்.

அப்போது சேகரின் நண்பன் கோபு ''அருமையான பரிசா? என்ன அது? சாக்லெட்டா அல்லது ஐஸ்கிரீமா?'' என்று ஆவலுடன் கேட்டான். சியமளாவும் ''அதெல்லாம் நாம் சற்று முன் தானே சாப்பிட்டோம். அவை எல்லாம் நாவிற்கு விருந்து. இப்போது நம் செவிக்கு நல் விருந்து கிடைக்கப் போகிறது. அது தான் தாத்தா அளிக்கப்போகும் பரிசு'' என்றாள். உடனே அங்கு கூடி இருந்த சிறுவர் சிறுமியர் யாவரும் ''ஓகோ! கதையா? நல்லவிருந்து தான், எல்லோரும் கேட்போம்'' என்றார்கள் மகிழ்ச்சி ததும்ப.

சோமநாதரும் ''பேஷ், பேஷ், நான் சொல்லும் கதைகளெல்லாம் உங்களுக்கு மிகவும் பிடித்திருக்கின்றன என்று தெரிகிறது. சென்ற முறை என்றும் சிரஞ்சீவியாக இருந்த மார்க்கண்டேயனின் கதையைக் கூறினேன். அவரைப் போல மரணத்தை வென்றவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர்தான் ருரு என்பவன். இவன் ஒரு முனிவரின் புதல்வன். ஒரு காட்டினருகே அமைந்திருந்த முனிவர்கள் வாழும் பகுதியில் இவன் இருந்து அவர்களுக்குப் பணிவிடைகள் செய்து வந்தான்'' என்று கூறி மேலும்

பாரதீயன்



தொடர்ந்தார்.

"முனிவர்களிடமிருந்து ருரு எல்லா வேதங்களையும் சாஸ்திரங்களையும் கற்றான். அவனது அறிவையும் அழகையும் கண்டு யாவரும் வியந்து பாராட்டினார்கள். அதே ஆசிரமப்பகுதியில் மிகவும் அழகானவளும் நற்குணங்களும் கொண்ட பிரமத்துவரை என்ற கன்னிப் பெண்ணும் வசித்து வந்தாள்.

இளம் பிராயத்திலிருந்த ருருவும் பிரமத்துவரையும் ஒருவரையொருவர் மனதார நேசித்தார்கள். பெரியவர்களின் ஆசிகள்பெற்று திருமணம் செய்து கொள்வது என்று அவர்கள் தீர்மானித்துக் கொண்டார்கள். பிரமத்துவரைக்குஅழகிய மலர்களைக் கொடுத்து மகிழ்விக்கலாம் என்று எண்ணி ஒருநாள் அதிகாலையில் ருரு மலர்கள் பறித்து வரச் சென்றான்.

பிரமத்துவரையும் ஆற்றில் போய் குளித்து வரக் கிளம்பினாள். வழியில் ருருவின் குடில் இருந்ததால் அங்கு அவன் இருக்கிறானோ என்று பார்த்தாள். ஆனால் அவன் அங்கே இருக்கவில்லை. ஒரு வேளை காட்டிற்குள் சென்றிருப்பானோ என்று எண்ணி அவளும் காட்டினுள் சென்றாள். சூரியோதயத்திற்கு முன் காட்டிற்குள் செல்லக் கூடாது என்றும் அப்படி மீறிச் சென்றால் கொடிய மிருகங்களால் ஆபத்து நேரிடலாம் என்றும் அவள் ருருவைப் பல தடவைகளில்



எச்சரித்தும் இருந்தாள். அதனால் அன்று இருட்டில் கிளம்பிப் போன ருருவுக்கு எந்தவித ஆபத்தும் நேர்ந்துவிடவில்லையே என்பதை உறுதி செய்து கொள்ளவே அவள் காட்டிற்குள் சென்றாள்.

சற்றுத் தொலைவில் ருரு மலர் பறித்துக் கொண்டிருப்பதை அவள் கண்டாள். அவள் ஒரு ஆலமரத்து விழுதைப் பிடித்துக் கொண்டு நின்று ருருவைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். திடீரென அங்கு பிரமத்துவரை வந்தது கண்டு ருரு திகைத்து நின்றான். தன்னைக் கண்டதும் ருரு ஓடிவரவில்லையே என்று அவள் கோபம் கொண்டாள். அது கண்டு ருரு தான் மலர்களை அவளிடம் கொடுக்கும் போது அவளது கோபம் போய்



விடுமென எண்ணி சிரித்து கொண்டான். ஆனால் அவனால் அவளுக்கு மலரைக் கொடுக்க முடியாதபடி ஒரு துயரச் சம்பவம் நிகழ்ந்துவிட்டது.

திடீரென பிரமத்துவரை நடுநடுங்கிய வாறே கீழே விழுந்தாள். அதைக் கண்டு ருரு அவளருகே ஓடி வந்து நின்றான். அப்போது ஒரு கருநாகம் சரசரவென்று வேகமாய் ஒரு புதருக்குள் ஓடி மறைந் ததைக் கண்டான். அது கொடிய விஷம் பாம்பு. அத்தகைய பாம்பு ஒருவரைத் தீண்டினால் அவர் உயிர்தப்பவே முடியாது. அவளைக் கருநாகம் தீண்டி விட்டது என அறிந்து ருரு கீழே கிடந்த அவளது உடலை தூக்கித் தன் மடிமீது கிடத்திக் கொண்டான். அவளிடம் அவன் பேசிப் பார்த்தான். ஆனால் அவள் பதில் கூறாமல் அவனையே பார்த்தாள். அப்பார்வை தன்னை எப்படியாவது உயிர் பிழைக்கவைக்குமாறு அவள் ருருவிடம் வேண்டுவது போல இருந்தது.

ருருவிற்கு உலகமே இருண்டுபோய் விட்டது போலாயிற்று. மெதுவாக அவளது உடலை அப்படியும் இப்படியும் திருப்பி மூச்சு விடுகிறாளா என்று பார்த் தான். எதுவும் பயனற்றுப் போகவே அவன் அந்த உடலருகே உட்கார்ந்து இஷ்டதேவதைகளை எல்லாம் பிரார்த் திக்கலானான். இப்படியாக அன்றையப் பகல் கழிந்து இரவும் வந்தது.

நள்ளிரவில் பளிச்சென்ற ஒரு ஒளி அவன் முன் தோன்றியது. தான் நேசித்த வளை ஒருவன் இழக்கும் போது அவன் படும் மனவேதனையை மன்மதன் நன்கு அறிவான். அதனால் எமலோகததிற்குப் போய் பிரம்மத்துவரையை சந்திப்ப தற்காக ஒரு மந்திரத்தை அவன் ருரு விற்குக் கூறினான். ருருவும் அதை உச்சரித்தவாறே எமலோகத்திற்குச் சென்று பிரமத்துவரையின் ஆத்மாவைக் கண்டான். ஆனால் எமகிங்காரர்கள் அவனை அவளோடுட பேச அனுமதிக்க வில்லை. ருருவோ அவர்களுடன் நீண்ட நேரம் வாக்குவாதம் புரிந்தான். எமனும் ருருவிற்கும் பிரமத்துவரைக்குமுள்ள பாசத்தைக் கண்டு மகிழ்ந்து அவளை உயிர்ப்பிப்பதாக வாக்களித்தான். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை விதித் தான். ருரு தன் ஆயுளில் பாதியைப் பிரமத்து வரைக்குக் கொடுக்க வேண்டும் என்பதே அது. ருருவும் மகிழ்ச்சியுடன் அதனை ஏற்றான். அவ்வாறு அவன்

ஏற்றதும் பிரமத்துவரை மறுநிமிடமே உயிர்பெற்று விட்டாள். பூஉலகிற்கு வந்து ருரு பிரமத்துவரையை மணந்து கொண்டு சுகமாக நீண்டகாலம் வாழ்ந்து வந்தான்.

சோமநாதர் இக்கதையைக்கூறிமுடித் ததும் எல்லோரும் கைதட்டி கதை மிக நன்றாக இருக்கிறது என்றார்கள். அப் போது சோமநாதர் ''ருரு எமலோகம் போய் எமனுடன் வாதாடி தான் நேசித்த பெண்ணின் உயிரை மீட்டு வந்தான். இது போல எமலோகம் வரை போய் தன் கண வனின் உயிரை ஒரு பெண்மணி மீட்டு வந்தாள். அவள் யாரென்று உங்களில் யாருக்காவது தெரியுமா?'' என்று கேட்டார்.

அப்போது கோபு என்ற சிறுவன் ''ஓ! எனக்குத் தெரியுமே'' எனவே சோம நாதரும் சிரித்துக்கொண்டே'' உனக்குத் தெரியுமா? யார் உன்னிடம் அதைச் சொன்னார்கள்?'' என்று கேட்டார். கோபுவும்'' யாரும் என்னிடம் சொல்ல வில்லை. என் பள்ளியின் நூலகத்தில் தமிழில் ''நம் நாட்டுக் கற்புக்கரசி கள்-சாவித்திரி'' என்ற புத்தகம் இருந்தது. அதை எடுத்துப் படித்தேன்'' என்றான்.

சோமநாதரும் ''பேஷ்! இம்மாதிரிப் புத்தகங்களைத்தான் நீங்கள் நூலகத் திலிருந்து எடுத்து வந்து படிக்க வேண்டும். அப்போது தான் நம் பாரதப் பண்பின் உயர்வு உங்களுக்குத் தெரியும். சத்தியவான். சாவித்திரியைப் பற்றி பலமொழிகளில் பல எழுத்தாளர்கள் கதை வடிவிலும் நாடக வடிவிலும் எழுதியுள்ளார்கள். நான் கூட உங்களைப் போல இருக்கையில் சத்தியவான்-சாவித்திரி நாடகத்தைக் கண்டு களித்திருக்கிறேன். புதுச்சேரியில் வாழ்ந்த அரவிந்தர் கூட சாவித்திரி என்ற நூலைப் படைத்துத்தந்துள்ளார். இந்தக் கதையைக் தெரிந்து கொள்ள வேண்டு மென்று நீங்களெல்லாம் விரும்புவது தெரிகிறது. அதை உங்களுக்கு இன் னொரு நாள் கூறுகிறேன்'' என்றார்.

சிறுவர்களும் ''சரி தாத்தா, நாங்கள் சென்று வருகிறோம்'' எனக் கூறி விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள்.





# சிரிப்பே சிகிச்சை!

ஜெயபுரத்தில் ஜெகஜாலன் என்ற நாட்டு வைத்தியன் இருந்தான். அவன் வைத்தியத்தை முறையாகப் பயிலவில்லை. ஆனால் பஸ்மம், சூர்ணம், லேகியம், கிருதம், மாத்திரை, குளிகை என்றெல்லாம் நிறைய வைத்துக் கொண்டு அவன் தன்னிடம் வரும் நோயாளிகளுக்கு அவற்றில் ஏதாவது ஒன்றைக் கொடுத்து அனுப்பி வந்தான். அவற்றை பயன் படுத்தியவர்களுக்கு ஆயுள் பலம் இருந்ததால் எப்படியோ உயிர் தப்பி வந்தார்கள். ஆனால் ஜெகஜாலனுக்கு மட்டும் நல்ல வைத்தியர் என்ற பெயர் கிடைத்து விட்டது.

ஒரு முறை அந்நாட்டு இளவரசனுக்கு விசித்திரமான நோய் கண்டது. அவன் பசி தாகம் போய் உற்சாக மற்று எப்போதும் உம்மென்று இருக்கலானான். மன்னன் தலை சிறந்த வைத்தியர்களை எல்லாம் அழைத்து வந்து மருந்து கொடுத்தும் இளவரசனின் நிலை மாறவில்லை. அப்போது ஒரு அரசாங்க அதிகாரி ஜெகஜாலனைப் பற்றிக் கூறி ''அவர் புகழ்பெற்ற நாட்டு வைத்தியர். அவரிடம் ஏராளமாக மருந்துகள் இருக்கின்றன. அவரை வரவழைத்து இளவரசருக்கு சிகித்சை செய்யச் சொல்லலாம்'' என்றார்.

மன்னன் அது பற்றி தன் அமைச்சர்களிடம் யோசனை கேட்கவே அவர்களும் ''ஜெகஜாலன் உண்மையிலேயே நல்ல வைத்தியனா என்று பரீட்சித்துப் பார்த்து விட்டே அவனை இளவரசருக்குச் சிகித்சை செய்வதற்கு அனுமதிக்க வேண்டும்'' என்றார்கள். இந்தப் பரீட்சைக்கு கடும் நோய்களால் நீண்டகாலமாய் அவஸ்தைப் பட்டு வரும் ஐந்து நோயாளிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மன்னன் அவர்களை இளவரசன்

சுவா.சங்கரராம்

படுத்திருந்த அறைக்குப் பக்கத்து அறையில் இருக்கச் சொன்னான்.

இதன் பிறகு அவன் ஜெகஜாலனை வரவழைத்து ''நீ உன்னை கை தேர்ந்த வைத்தியன் என்று சொல்லிக் கொள்கிறாயாமே. உன்னை கொண்டு என் மகனுக்கு சிகித்சை அளிக்க விரும்புகிறேன். அதற்கு முன் நீ உண்மையிலேயே நல்ல வைத்தியன் தானா என்று எனக்குத் தெரிய வேண்டும். அதற்காகக் கடும் நோய் களால் அவஸ்தைப் படும் ஐந்து நோயாளிகளை நீ குணப்படுத்திக் காட்ட வேண்டும். அதைச் செய்யத் தவறினால் நீ உண்மையான வைத்திய னல்ல என அறிவித்து உன் தலையைத் துண்டித்து விடுவேன்'' என்றான்.

ஜெகஜாலன் இதைக் கேட்டு முதலில் பயந்தாலும் பிறகு சமாளித்துக் கொண்டு ''அரசே! எப்படிப்பட்ட கொடிய நோயாக இருந்தாலும் நொடியில் நான் குணப்படுத்திவிடுவேன். ஆனால் நோயாளிகளுக்குச் சிகித்சை செய் யும் போது மட்டும் வேறு யாரும் என்னுடன் இருக்கக் கூடாது'' என் றான். மன்னனும் ''சரி, நோயாளி களைத் தவிர உன்னுடன் வேறு யாரும் இருக்க மாட்டார்கள். ஐந்து நோயாளிகள் ஒரு அறையில் இருக்கிறார்கள். நீ அங்கே போய் உன் சிகித்சையை ஆரம்பி'' என்றான். இரு வீரர்கள் அவனை நோயாளிகள் இருந்த அறைக்குள் விட்டு விட்டுப் போனார்கள்.



ஜெகஜாலன் அந்த ஐந்துபேர் களையும் பார்த்தான். பிறகு அவன் எல்லோரிடமும் ''உங்கள் நோயை நொடியில் தீர்த்து விடுவேன். அதற் காக நான் முதலில் செய்ய வேண்டிய வேலை அந்தந்த நோயாளியின் உடலிலிருந்து அவனது இருதயத்தை அறுத்து எடுத்து அதை நன்கு வாட்டி பஸ்மமாக்கி இன்னொரு சூர்ணத் தோடு சேர்த்துத் தேனில் குழைத்துக் கொடுப்பேன். அதை நீங்கள் உட் கொண்டதும் உங்கள் நோய் பஞ் சாய்ப் பறந்து விடும். ஒவ்வொரு வராக வாருங்கள். முதலில் நீ வா. க்ஷய ரோகி தானே நீ?'' என்றான்.

அந்த நோயாளியோ ''எனக்கு எந்த வித நோயும் இல்லை.

சிகித்சையும் வேண்டாம். மருந்தும் வேண்டாம்'' என்று கூறியவாறே அந்த அறையைவிட்டு வேகமாக வெளியேறி ஓடினான். அது போலவே மற்ற நால்வரும் ஒவ்வொருவராகக் கூறி விட்டு அந்த அறையை விட்டு ஓடி விட்டார்கள். அவர்களெல்லோரும் தமக்கு எவ்வித நோயும் இல்லை என்று கத்தியவாறே ஓடியது கண்டு மன்னன் ''அடேயப்பா! இந்த ஜெகஜாலன் ஒரே நொடியில் நெடுங்காலக் கொடிய நோய்களை குணப் படுத்தி விட்டானே'' என்று எண்ணி ஆச்சரியப் படலானான்.

அதே சமயம் இளவரசன் தன் அறையில் விழுந்து விழுந்து சிரிக்கலானான். ஏனெனில் அவன் தன் அறையில் இருந்தபடியே அடுத்த அறையில் என்ன நடக்கிறது என்பதைப் பார்த்தும் ஜெகஜாலன் சொன்னதைக் கேட்டுக் கொண்டும் இருந்தான். ஜெகஜாலன் சொன்னதைக் கேட்டு அந்த நோயாளிகள் தமக்கு ஒரு நோயும் இல்லை என்று கூறிதாம் உயிர் தப்ப வேண்டுமே என்பதற்காக அலறிப்புடைத்துக் கொண்டு அந்த அறையிலிருந்து ஓடியது தான் அவனுக்கு அப்படிச் சிரிப்பை மூட்டியது. மன்னன் இளவரசனின் அறைக்குப் போய் அவன் சிரிப்பதைக் கண்டு ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தான். இளவரசன் தன் தந்தையைக் கண்டதும் சிரித்தவாறே ''அப்பா! எனக்கு எந்த நோயும் இல்லை'' என்று கூறி அடுத்த அறையில் நடந்ததையெல்லாம் விவரமாகக் கூறினான்.

மன்னனும் ''அவன் வைத்தியன் இல்லையென்றாலும் உன்னைச் சிரிக்க வைத்து உன் நோயைப் போக்கி விட்டான். அதனால் அவனுக்கு நல்ல பரிசை அளித்து இங்கேயே வேறு வேலை ஏதாவது கொடுத்து விடுகிறேன்'' என்றான். அவனோடு இருந்த அமைச்சரும் ''நன்கு சிரித்தாலே நோய் பறந்து விடும். இதுவும் ஒரு சிகித்சையே'' என்று கூறினார்.



# மீதம் கொடுத்தால் போதும்!

வேலன் வேலை செய்யாது ஊர் சுற்றி வருபவன். யார் வீட்டிலாவது கொஞ்சம் சாப்பாடு போட்டால் சாப்பிட்டு விட்டு ஊர் எல்லையிலுள்ள காளி கோவிலில் போய்ப் படுத்துத் தூங்குவான். எந்த வேலையையும் செய்ய அவன் உடல் கொஞ்சமும் வணங்காது.

ஒரு முறை அவனுக்குச் சேர்ந்தாற்போல இரண்டு நாட்களுக்குச் சாப்பாடே கிடைக்கவில்லை. பசியால் துடித்து அவன் அம்மன் கோவிலுக்குப் போய் ''தேவி! இந்த கிராமத்தில் அன்னதான மகிமையை அறியாமல் இருக்கிறார்களே. நீயாவது அறிவுறுத்தி எனக்குச் சாப்பாடு போடச் சொல்லக் கூடாதா?'' எனக் கூறி வசைமாரி பொழிந்தான்.

அவனது நிலையைக் கண்டு மனம் இரங்கி காளிதேவி அவன் முன் தோன்றி ''வேலா! உனக்கு கைகால்கள் உறுதியாக இருக்கின்றனவே. நீ உழைத்து வேலை செய்து தினமும் ஒரு ரூபாய் எனக்குக் கொடுத்தால் உனக்குப் பத்து ரூபாய் கொடுக்கிறேன்'' என்றாள்.

வேலனும் பயபக்தியுடன் தேவியை வணங்கி ''தேவி! நான் ஏன் வேலை செய்ய வேண்டும்? நீங்களோ எனக்கு தினமும் பத்து ரூபாய் கொடுக்க போகிறீர்கள். அதில் நான் கொடுக்க வேண்டிய ஒரு ரூபாயைக் கழித்துக் கொண்டு ஒன்பது ரூபாய் எனக்குக் கொடுங்கள். உங்களுக்கும் ஒரு ரூபாய் லாபம். எனக்கும் பணம் கிடைத்து விடும்'' என்றான்.





# நம்ப வேண்டும்!

முத்தூரில் முத்தையயன் மிகவும் கெட்டிக்காரன். ஆனால் ஊரார் அவனை ஏமாற்றுப் பேர்வழி என்றே கூறி வந்தனர். அவனோ அதைப் பொருட்படுத்தாமல் தான் கெட்டிக் காரனே என எண்ணி வந்தான்.

அந்த ஊரிலிருந்த நஞ்சப்பனுக்கு மிகுந்த சிக்கல் ஏற்படவே, அவன் தன் நிலங்களை விற்று தன் கடன் களை அடைத்தான். அப்படியும் இரண்டு மூன்று பேர்களின் கடன்கள் அடைக்க முடியாமல் நின்று விட்டன. அவற்றில் ஒன்று மன்னாருடையது. மன்னார் உடனே தனக்கும் பணம் வேண்டுமென்று நஞ்சப்பனை நெருக்கலானான்.

மன்னார் முத்தையயனின் நெருங் கிய நண்பன். எனவே நஞ்சப்பன் முத்தையயனைக் கண்டு ''நான் மன் னாரின் கடனைப் பத்து நாட்களில் அடைத்து விடுவதாகச் சொல். அதுவரை அவன் பொறுத்திருக்கும் படி நீதான் செய்ய வேண்டும்'' என்று கூறினான். அது கேட்டு முத்தையயன் ''இந்த மன்னார் பண விஷயத்தில் மிகவும் கறார். ஆனால் நான் உத்திர வாதம் அளித்தால் அவன் என்னை நம்புவான். நீ பத்து நாட்களில் பணம் செலுத்தாவிட்டால் நானல்லவா அந்தத் தொகையைக் கொடுக்க வேண்டி வரும்!'' என்றான்.

நஞ்சப்பனும் ''நீ என்னை நம்பி அவனுடைய பணத்தைப் பத்து நாட் களில் நான் கொடுத்து விடுவேன் என்று சொல்'' என்றான். முத்தையய னும் ''நான் உன்னை நம்புகிறேன். ஆனால் நீ என்னை நம்புகிறாயா என்று எனக்குத் தெரிய வேண்டுமே. உன் மனைவி அணிந்திருக்கும் வைர மாலையைக் கொஞ்ச நாட்கள் தான் அணிந்திருக்க என் மனைவி ஆசைப் படுகிறாள். அதனால் அதைப் பத்து நாட்களுக்கு என்னிடம் கொடுத்து வைக்கிறாயா?'' என்று கேட்டான்.

பாபநாசம் சாமா-

அந்த வைரமாலை இருபத்தைந் தாயிரம் ரூபாய் பெறும். அதைக் கொடுத்தால் முத்தைய்யன் திருப்பிக் கொடுக்க மாட்டான் என்பது நஞ்சப் பனுக்கு நன்கு தெரியும். அதனால் அது பற்றித் தன் மனைவியிடம் கேட்டுச் சொல்வதாகக் கூறிவிட்டு அவன் தன் வீட்டிற்கு வந்து விட் டான். அன்று மாலை முத்தைய்யன் சிலரிடம் ''ஒருவன் பிறரை நம்ப வேண்டும். இந்த நஞ்சப்பன் என்னை நம்பி பத்து நாட்களுக்கு அவனுடைய மனைவியின் வைர மாலையைக் கொடுக்க மாட்டா னாம். ஆனால் அவனை நம்பி நான் மன்னாருக்கு வாக்குறுதி கொடுக்க வேண்டுமாம். என்ன நியாயம் இது!'' என்று கூறினான்.



அதே ஊரில் பொன்னப்பன் என்ற நகை வியாபாரி இருந்தான். அவ னுக்கு இந்த விஷயம் தெரியவே, முத்தைய்யனைப் பார்த்து ''இந்த நகையைப் பார். இதன் மதிப்பு ஆயிரம் ரூபாய். இதை உன்னிடம் நூறு ரூபாய்க்கு வைக்கிறேன். உன் கையிலிருந்து பணம் வாங்கினால் பேரம் செய்து லாபம் பெற முடிகிறது. ஒரு வாரத்துள் நூறு ரூபாயைக் கொடுத்து இந்த நகையை வாங்கிக் கொள்கிறேன்'' என்றான். முத்தைய் யனும் நகையை வாங்கிக் கொண்டு பொன்னப்பனுக்கு நூறு ரூபாய் கொடுத்து அவனை அனுப்பினான்.

ஒரு வாரம் கழிந்தது. பொன்னப் பன் நூறு ரூபாயை எடுத்துக் கொண்டு முத்தைய்யனிடம் போய் ''இதோ நூறு ரூபாய். இதை வாங்கிக் கொண்டு நான் அடகு வைத்த நகையைக் கொடு'' என்றான். அது கேட்டு முத்தைய்யன் சிரித்து ''நீ என்னிடம் நகையை அடகு வைத் துப் பணம் வாங்கிப் போனாயா? அதற்குப் பத்திரம் எங்கே? சாட்சி யார்? என்னை நம்பியா நகை தந்தாய்? என்னைப் பற்றித் தான் நீ நன்கு அறிவாயே. இனிமேலாவது பத்திரமோ அல்லது சாட்சியோ இல் லாமல் உன் பொருளைக் கொடுத்து ஏமாந்து போகாதே. நீ கொண்டு வந்த நூறு ரூபாயை நீயே எடுத்துக் கொண்டு போ'' என்றான்.

ஆனால் பொன்னப்பன் கூச்சல் போட்டுக் கூட்டம் கூட்டிவிட்டான். முத்தைய்யனோ ''இவன் எனது



ஆயிர ரூபாய் மாலையை ஏதோ கதை சொல்லி நூறு ரூபாய் கொடுத்து விட்டுத் தட்டிக் கொண்டு போகப் பார்க்கிறான். நீங்களே சொல்லுங் கள். ஒரு நகை வியாபாரி சாட்சியோ பத்திரமோ இல்லாமல் நகையை யாரிடமாவது கொடுப்பானா?'' என்று கூடி நின்றவர்களிடம் கேட்டான்.

அங்கு கூடியவர்கள் எல்லோரும் ''முத்தைய்யன் சொல்வதே சரி. இதுவரை இவன் தான் மோசக்காரன் என்று நினைத்து வந்தோம். இப்போது பொன்னப்பன் இவனையும் மிஞ்சி விட்டானே. ஆமாம் பொன்னப்பா! ஏன் இப்படிச் செய்தாய்?'' என்று கேட்டார்கள். அப்போது பொன்னப்பன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு ''ஏனா? ஒரு திருடன் ஒரு சங்கிலியைத் திருடி இந்த முத்தைய்யனிடம் விற்க வந்தான். முத்தைய்யன் அதை எடுத்து வந்து என்னிடம் காட்டி அது எவ்வளவு பெறும் என்று கேட்டான். நானும் அது ஆயிரம் ரூபாய் பெறும் என்றேன். அந்த முத்தைய்யன் அந்தச் சங்கிலியை நூறு ரூபாய் கொடுத்து வாங்கி விட்டான். நேற்று அரசாங்க வீரர்கள் வந்து இவன் வாங்கிய சங்கிலி போன்ற போலி சங்கிலியைக் காட்டி யாராவது அது போன்ற சங்கிலியை விற்க வந்தால் தமக்குத் தெரிவிக்கும்படிச் சொல்லி விட்டுப் போனார்கள். அதை நான் முத்தைய்யனிடம் சொல்லி சங்கிலியை அரசாங்கத்திடம் ஒப்படைக்கும்படி சொன்னேன். ஆனால் இவன் கேட்கவில்லை. மேலும் அந்த சங்கிலியை நான் தான் இவனுக்குக்

கொடுத்ததாக சொல்லப் போவதாக பயமுறுத்தினான். அதற்காக நான் நாடகமாடி சங்கிலி இவனுடையது தான் என்று ஒப்புக் கொள்ள வைத் தேன். எனக்கும் அச்சங்கிலிக்கும் எந்த சம்மந்தமும் இல்லை என்று உங்களுக்குத் தெரிந்து விட்டது. நீங்கள் இதற்குச் சாட்சி' என்றான்.

முத்தையயன் திகைத்துப் போனான். சாமர்த்தியமாக பொன்ன ப்பன் தன்னைக் குற்றவாளியாக்கி விட்டதை அவன் உணர்ந்தான். சற்று நேரத்திற்குப்பின் அரசாங்க வீரர்கள் வந்து முத்தையனைப் பிடித்துக் கொண்டு போனார்கள். முத்தை ய்யன் தன்னிடமிருந்த சங்கிலியை அரசாங்கத்திடம் ஒப்படைக்க வேண்டியதாயிற்று. நீதிபதி திருட் டுப் பொருளை அவன் வாங்கிய குற்றத்திற்காக இருநூறு ரூபாய் அபராதம் விதித்தார். அதைக் கட்டிவிட்டு வீடு திரும்பும் போது அவன் பொன்னப்பனிடம் ''என்ன ப்பா இப்படி ஏன் என்னை மாட்டிவிட்டாய்? உனக்கு நான் எந்தக் கெடுதலும் செய்யவில் லையே'' என்று கேட்டான்.

பொன்னப்பனும் ''நான் உன்னை எமாற்றவில்லை. நகையைக் கொடுத்து உன்னிடமிருந்து நூறு ரூபாய் வாங்கிக் கொண்டேன். அதை மீட்க பணத்துடன் நான் வந்த போது நீ என்னை ஏமாற்ற முயன்று இப்படி மாட்டிக் கொண்டாய்'' என்றான். முத்தையயன் தலை குனிந்து ''நீ சொன்னது சரிதான்'' எனவே பொன்னப்பனும் ''நீ நஞ்சப்பனு க்காக மன்னாரிடம் உத்திரவாதம் கொடுக்க மறுத்தாய். ஆனால் நான் அதைக் கொடுத்தேன். அவன் பத்திரமோ சாட்சியோ இல்லாமல் மன்னாரின் கடனைத் தீர்த்து விட்டான். மனிதன் மற்றவனை நம்பினாலே அவனுக்கு நன்மை ஏற்படும். அதைத் தெரிந்து கொள்'' என்றான்.



# பசிக்கு தண்டனை!

ஜெயவீரபுரத்தை ஜெகவீரவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். ஒரு நாள் மங்கப்பன் என்பவன் அரசாங்கப் பொக்கிஷத்தில் திருடும் போது பிடிபட்டான். வீரர்கள் அவனைக் கையும் களவுமாய்ப் பிடித்ததால் அடித்து இழுத்துக் கொண்டு அரசனின் தர்பாருக்குச் சென்றனர்.

அரசனும் ''நீ திருடும் போது கையும் களவுமாகப் பிடிபட்டாய். எனவே சாட்சி எதுவும் தேவை இல்லை. நீ இந்தக் குற்றத்தைப் பற்றி என்ன கூறப் போகிறாய்?'' என்று கேட்டான். மங்கப்பனும் ''அரசே! இந்தத் திருட்டை நான் வேண்டுமென்றே செய்யவில்லை. என் பசிதான் இதைச் செய்யத் தூண்டியது. எனவே தாங்கள் என்னை தண்டிக்க நினைத்தால் என் பசியையும் சேர்த்து தண்டிக்க வேண்டும்'' என்றான். இப்படிச் சொன்னதால் பசிக்கு எந்த தண்டனையும் விதிக்க முடியாமல் அரசன் தன்னை விட்டு விடுவான் என்று அவன் எதிர்பார்த்தான்.

திருடன் என்ன எதிர் பார்க்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட அரசன் ''நீ செய்த திருட்டுக் குற்றத்திற்கு ஓராண்டு சிறைத்தண்டனையையும், உன்னைத் தூண்டி விட்டு துணையாக இருந்த உன் பசிக்கு ஒரு வாரகாலத்திற்கு உணவு கொடுக்கக் கூடாது என்றும் தண்டனை விதித்து நீ இத்தண்டனைகளை ஒரே சமயத்தில் அனுபவிக்க வேண்டும்'' என்று தீர்ப்பளித்தார்.



கதைக்குச் சரியான முடிவை எழுதித் தக்க பரிசைப் பெறுங்கள்

# ஆக்க பூர்வமான போட்டி

(ஒரு கதையின் முன் பகுதி கீழே கொடுக்கப் பட்டுள்ளது. இதைச் சரியாக முடிக்க வேண்டியதுதான் உங்கள் முயற்சி. இதன் பின் பகுதியை 200 சொற்களுக்குள் எழுதி அனுப்புங்கள். மிகச் சிறந்த படைப்பிற்கு கவர்ச்சிகரப் பரிசு கிடைக்கும். இப்போட்டி இளைஞர்களுக்கு மட்டுமே. உங்கள் பெயர், வயது, படிப்பு, வகுப்பு, பின்கோடுடன் முகவரி ஆகியவற்றை எழுத மறந்து விடாதீர்கள். இளைஞர்களுக்கு இது ஒரு அரிய வாய்ப்பு)

### கதையின் முன்பகுதி

மங்களபுரத்து மாதவன் பெரும் பணக்காரன். அவன் தன் மகன் மோகனுக்கு ஏற்ற பெண்ணைத் தேர்ந்தெடுத்து மணம் செய்து வைக்க எண்ணினான். மோகன் இளைஞன், அழகன் மிகவும் நல்லவன்.

மாதவனின் நண்பன், ராகவன். ஏழை. ஒரு சிறு துணிக்கடை வைத்து வியாபாரம் செய்து வந்தான். அதிகம் படிக்காவிட்டாலும் நல்ல அறிவாளி. துணிமூட்டையைத் தலை மீது சுமந்து ஊர் ஊராகப் போய் விற்றும் வருபவன். அதனால் அவன் பல ஊர்களிலுள்ள பல குடும்பங்களைப் பற்றி அறிந்திருந்தான்.

ஒருநாள் மாதவன் ராகவனிடம் தன் மகனின் திருமணம் பற்றிக் கூறி அவனுக்கு ஏற்ற பெண் எந்த ஊரிலாவது இருக்கிறாளா என்று கேட்டாள். ராகவனும் ''ராமாபுரத்து தனசேகரனின் மகள் சந்திரா. கிருஷ்ணாபுரத்து நாகராஜனின் மகள் இந்திரா. இந்த இரு பெண்களும் மோகனுக்கு ஏற்றவர்களே. இவர்களில் ஒருவரை நீ தேர்ந்து எடு'' என்றான்.

மாதவனும் ''பெண்ணுக்கு அழகு மட்டுமல்ல. அறிவும் நற்குணங்களும் இருக்க வேண்டும். நீயே இவர்களில் ஒருவரைத் தேர்ந்து எடு'' எனவே ராகவனும் ஒரு வாரத்திற்குள் சொல்வதாகக் கூறிச் சென்றான். இதன்பின் ராகவன் அவ்விரு பெண்களில் யாரை எக்காரணத்தால் எப்படித் தேர்ந்து எடுத்தான்? அதனை மாதவன் ஏற்றானா?

இக்கதையின் முடிவை எழுதி நல்ல தலைப்பைக் கொடுத்து உங்கள் படைப்பின் மீது ஆக்கபூர்வமான போட்டி என எழுதி டிசம்பர் 30க்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள்.

## அக்டோபர் 2000 பாரத தரிசனப் போட்டியின் விடைகள்

1. அ) சங்கராச்சாரியார் ஆ) அசோகன்
   இ) மீராபாய் ஈ) அதர்வ வேதம்

2) மேவார் (உதயபூர்) இளவரசி கிருஷ்ணகுமாரி மார்வார் ஜோதிபூர் இளவரசர்கள்

# ஆகஸ்ட் மாத ஆக்க பூர்வமான போட்டி

(தம் குரு சவாரி செய்ய ஒரு குதிரையை வாங்க அவரது சீடர்கள் சந்தைக்குச் சென்றார்கள். குதிரை விலை அதிகமாக இருப்பது கண்டு குதிரை முட்டை வாங்குவது எனத் தீர்மானித்து அவர்கள் ஆசிரமத்திற்கு வந்து தம் குருவிடம் அந்த முடிவைக் கூறவே, அவரும் அப்படியே செய்யலாம் என்றார். அதன் பிறகு நடந்தது இது

## பரிசு பெற்ற படைப்பு

# மகாமேதாவிகள்

குருவின் அனுமதி கிடைத்ததும் அவர்கள் குதிரை முட்டையைத் தேடிக் கொண்டு காட்டிற்குள் சென்றார்கள். அவர்கள்தம் எதிரே வந்தவர்களிடம் குதிரை முட்டை எங்கே கிடைக்கும் எனக் கேட்கவே அவர்கள் யாவரும் சிரித்துவிட்டுப் போனார்களேயொழிய, யாரும் பதில் கூறவில்லை.

அவர்கள் இன்னும் யாரிடம் கேட்கலாமென யோசித்தபோது ஒரு ஏமாற்றுப் பேர்வழி அங்கு வந்தான். அவனிடம் அவர்கள் குதிரை முட்டை எங்கு கிடைக்கும் எனக் கேட்கவே அவனும் சிரித்தவாறே ''குதிரை முட்டைதானே. எங்கும் போக வேண்டாம். நானே விலைக்குக் கொடுக்கிறேன். விலை ஆயிரம் வராகன்'' என்று கூறிப் பணத்தை வாங்கிக் கொண்டு அங்கே சற்று தூரத்தில் கிடந்த உருண்டையான வெள்ளை நிறக்கல் ஒன்றை எடுத்துக் கொடுத்தான். பிறகு அவன் ''இதிலிருந்து எந்த நிமிடமும் குதிரைக் குட்டி வரலாம். அது வேகமாக ஓடி விடாமல் பிடித்துக் கொண்டு போங்கள்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

நான்கு சீடர்களும் அந்தக் 'குதிரை முட்டை'யைத் தூக்கிக் கொண்டு சென்றார்கள். கொஞ்ச தூரம் போனதும் அவர்களது கையிலிருந்து நழுவி அந்த 'முட்டை ஒரு புதரில் விழுந்தது. மறு விநாடியே அந்தப் புதரிலிருந்த ஒரு முயல் குட்டி வேகமாக ஓடியது. உடனே நான்கு சீடர்களும் ''அதோ குதிரைக் குட்டி! ஓடுகிறது! பிடி! பிடி!'' என்று கத்தியவாறே அதைத் துரத்திக் கொண்டு ஓடினார்கள். அது அவர்களுக்கு அகப் படாமல் ஓரிடத்தில் மறைந்தது. அந்த இடத்தில் ஒரு கழுதை நின்று கொண்டிருந்தது.

அதைப் பார்த்த சீடர்கள் ''அடேயப்பா! அவ்வளவு சிறிய குதிரைக் குட்டி கொஞ்ச நேரத்திற்குள் இவ்வளவு பெரிதாக வளர்ந்து விட்டதே'' என்று கூறி அதை இழுத்துக் கொண்டு குருவின் ஆசிரமத்திற்குப் சென்றார்கள். குருவும் மகிழ்ந்து அதன்மீது அமர்ந்து சீடர்களோடு நகருக்குள் செல்லவே, அங்குள்ள மக்கள் பலமாகக் கை தட்டிச் சிரித்தார்கள். அந்த சத்தத்தால் கழுதை மிரண்டு தன் மீதிருந்த குருவைக் கீழே தள்ளி உதைத்து விட்டு எங்கோ ஓடிப் போய் விட்டது.

இந்த சீடர்களையும் அவர்களது குருவையும் அந்நகர மக்கள் மகாமேதாவிகள்' எனக் கூறி கேலி செய்தனர்

அ. சீனிவாசன்
தலையாறு

58. கடோத்கசனின் பயங்கரப் போர்

# மகாபாரதம்

போர் மிகத் தீவிரமாக நடந்தது. அர்ஜுனனுக்குத் தன் மகன் இறந்து போனது இன்னமும் தெரியவில்லை. அவன் கௌரவ வீரர்களை அடித்து வீழ்த்திக் கொண்டிருந்தான். வேறொரு புறத்தில் பீஷ்மர் பாண்டவர்களின் படை வீரர்களை கதிகலங்க அடித்துக் கொண்டிருந்தார். பீமனும் திருஷ்டத்யும்னனும் சாத்தியகியும் தமது பராக்கிரமத்தைக் காட்டிக் கொண்டிருந்தார்கள். துரோணரோ பயங்கரமாகப் போர் புரிந்து கொண்டிருந்தார்.

இராவந்தன் இறந்ததைக் கண்ட பீமனின் மகன் கடோத்கசன் பயங்கர உருவில் பெரிய ராட்சஸப் படையுடன் கௌரவப் படையைத் தாக்க வந்தான். அவனது கையில் மின்னும் ஈட்டியைக் கண்டு கௌரவப்படை பயந்து நடுங்கியது. அதைப் பார்த்த துரியோதனன் ஆவேசம் கொண்டு கடோத்கசனை எதிர்க்கலானான். துரியோதனனுடன் வங்கதேசத்து மன்னன் தன் பெரிய யானைப் படையுடன் இருந்தான். அதைக் கண்ட கடோத்கசன் கடும் கோபம் கொண்டான்.

அவனது ராட்சஸர்கள் யானைகளைத் தாக்கி அங்குமிங்கும் ஓட வைத்தனர். இதைக் கண்ட துரியோதனன் தன் அம்புகளால் கடோத்கசனின் ராட்சஸர்களைத் தாக்கினான். அப்போது கடோத்கசனே துரியோதனனுடன் போர் புரியலானான்.





துரியோதனன் கடோத்கசனை அடித்து படுகாயப் படுத்தவே அவன் கோபம் கொண்டு துரியோதனனைத் தாக்க ஒரு மாபெரும் சக்தி ஆயுதத்தை எடுத்துக் கொண்டான். அதைக் கண்ட வங்க மன்னன் தான் அமர்ந்திருந்த யானையை அவர்களிருவருக்கும் மத்தியில் ஓட்டவே, கடோத்கசன் எறிந்த சக்தி ஆயுதம் வங்க மன்னனின் யானையைத் தாக்கியது. அது கீழே விழவே வங்க மன்னன் சட்டென அதன் மீதிருந்து குதித்து எங்கோ ஓடி விட்டான். அதனால் கோபம் கொண்ட கடோத்கசன் பயங்கரமாக துரியோத னனைத்தாக்கலானான்.

அதைக் கண்ட பீஷ்மர் துரோணரிடம் ''கடோத்கசன் துரியோதனனைத் திக்கு முக்காடச் செய்து கொண்டிருக்கிறான். கடோத்கசனைக் கொல்ல யாராலும் முடியாது. அதனால் நீங்கள் போய் துரியோதனனைக் காப்பாற்றுங்கள்'' என்றார். துரோணரும் சோமதத்தன், பாஹ்லிகன், சைந்தவன், கிருபர், பூரி சிரவஸ், சல்லியன் பிருகத்சலன் அசுவத் தாமன், விகர்ணன், சித்திரசேனன், விவிம்சதி, ஆகிய மகா வீரர்களையும் பெரும் படையையும் உடன் அழைத்துக் கொண்டு சென்றார். அப்போது கடோத் கசன் துரியோதனனை ஓட ஓட விரட்டிக் கொண்டிருந்தான்.

கடோத்கசனை துரோணரும் மற்ற மகா வீரர்களும் தடுக்க முயலவே அவன் சற்றும் பயப்படாமல் அவர்களை எதிர்க்கலானான். அவர்களில் சிலர் காயமுற்றனர். சிலர் தம் ரதங்களை இழந்தார்கள். வேறு சிலர் தம் தேரோட்டிகளை இழந்தனர். கடோத் கசனின் கடும் எதிர்ப்பை அவர்களால் சமாளிக்க முடியவில்லை.

கடோத்கசனோ துரியோதனனை விட்டு விடவில்லை. அவனையே தாக்க லானான். தன்னை எதிர்க்க வந்த கௌரவப் படை வீரர்களைத் தாக்கி விரட்டி துரியோதனனை நோக்கி முன்னேறினான். அப்போது தருமர் பீமனிடம் ''உன் மகன் கடோத்கசன் கடும் போர் புரிந்து கொண்டிருக்கிறான். பாஞ்சாலர்களை அழிக்க முற்பட்டிருக் கும் பீஷ்மரை அர்ஜுனன் எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கிறான்.'' என்றார். இந்நிலையில் அர்ஜுனனுக்கு உதவப் போவதை விட கடோத்கசனுக்கு உதவுவது தான் சரியானது என்று எண்ணி பீமன் கடோத்கசன் இருக்கும் இடத்திற்கு விரைந்து சென்றான்.

பீமனும் அபிமன்யு; உப பாண்டவர்கள், நீலன், சத்தியதிருதி, சிரேணிமந்தன், வசுதாசன் முதலியோரும் சென்றனர். இருதரப்பினருக்குமிடையே பயங்கரப் போர் மூண்டது. போரில் பாண்டவர் கையே ஓங்கி உயர்ந்திருந்தது. இது கண்டு துரியோதனன் பீமனை எதிர்க்க வந்தான். அப்போது அபிமன்யு பாண்டவ வீரர்களோடு வந்து துரியோதனனைச் சூழ்ந்து கொண்டான். துரியோதனனின் பரிதாப நிலையைக் கண்ட துரோணர் அவனுக்கு உதவ சில வீரர்களுடன் வந்து சேர்ந்தார்.

அப்போது நடந்த போரில் கடோத்கசன் ராட்சஸ மாயைகளைக் காட்டிப் பகைவர்களைத் திக்கு முக்காட வைத்தான். கௌரவப்படை வீரர்கள் இதனால் பயந்து போய்த் தம் முகாம்களை நோக்கி ஓடினார்கள். அப்போது துரியோதனன் பீஷ்மரிடம் சென்று ''பிதாமகரே! பாண்டவர்கள் கிருஷ்ணரை நம்பி இப்போரில் இறங்கியுள்ளது போல நாங்கள் உங்களை நம்பித் தான் போர் புரிகிறோம். கடோத்கசனும் பீமனும் சேர்ந்து நம் படைகளை அழித்துக் கொண்டிருக்கிறார்கள். முதலில் அந்த ராட்சஸன் கடோத்கசனை ஒழிக்க வேண்டும். அதற்கு ஒரு வழி செய்யுங்கள்'' என்று வேண்டினான்.

பீஷ்மரும் துரியோதனனிடம் ''நீ தருமர், பீமன், அர்ஜுனன், நகுலன், சகாதேவன் ஆகியோருடன் போர் புரி. ஒரு ராஜா மற்றொரு ராஜாவுடன்தான் போர் புரிய வேண்டும். ராட்சஸனுடன் போர் புரிய நாங்கள் இருக்கிறோம். இந்த ராட்சஸனோடு போர் புரிய பகதத்தனை



அனுப்பலாம். அவனே கடோத்கசனோடு போர் புரியச் சரியானவன்'' எனவே துரியோதனன் பகதத்தனை கடோத்கசனுடன் போர் புரிய அனுப்பினான்.

பகதத்தன் முதலில் பீமனை எதிர்த்தான். அவனைத் தடுக்க உப பாண்டவர்கள்'' கேகேயர்கள், அபிமன்யு, தசார்ணவ மன்னன் க்ஷத்திரதேவன், சேதி மன்னன், சித்திர கேது ஆகியோர் பாய்ந்து வந்தார்கள். பகதத்தன் அவர்களைத் தாக்குவது கண்டு கடோத்கசன் விரைந்து வந்து அவனைத் தாக்கினான்.

இச்சமயத்தில் இராவந்தன் இறந்து போனது அர்ஜுனனுக்குத் தெரிந்தது. அதனால் அவன் தன் ரதத்தை கௌரவர்கள் உள்ள இடத்திற்குக் கொண்டு செல்லும்படி கிருஷ்ணரிடம் கூறினான். பீமனும் கௌரவர்களைத் தாக்க



லானான். திருதராஷ்டிரனின் மகன்களை அடித்து அடித்து விரட்டிக் கொல்ல லானான். அதைக் கண்ட துரோணர் அவனைத் தடுத்துப் பார்த்தும் முடியாது போயிற்று. இச் சமயத்தில் இருட்ட ஆரம்பிக்கவே அன்றையப் போர் முடிந்தது.

துரியோதனன் தன் கூடாரத்திற்குப் போய் சகுனி, துச்சாதனன், கர்ணன் ஆகியோரைக் கூட்டி ஆலோசனை புரிந்தான். அவன் கர்ணனிடம் ''பீஷ்மர், துரோணர், சல்லியன் ஆகியோரால் கூடப் பாண்டவர்களை ஒன்றும் செய்ய முடியவில்லை. அவர்கள் தோற்காமல் இருக்க, நம் படைகளோ அழிந்து கொண்டே இருக்கின்றன. கடவுள் நம்மீது கருணை காட்டவில்லையே. நான் எப்படித்தான் வெற்றி அடையப் போகிறேனோ?'' என்றான்.

கர்ணனும் ''இந்த பீஷ்மர் போர்க் களத்தை விட்டு அகன்றதும் நான் படை களுக்குத் தலைமை ஏற்று பாண்டவர் களைப் பூண்டோடு அழித்து விடுகிறேன். பீஷ்மருக்குப் பாண்டவர்கள் மீது பாசம் அதிகம். அதனால் அவர் அவர்களைக் கொல்லமாட்டார். எனவே பீஷ்மரின் கூடாரத்திற்குப் போய் அவரிடம் ஆயுதங் களைக் கைவிட்டு ஒய்வு எடுத்துக் கொள்ளும்படிச் சொல்ல வேண்டும். அப்படி அவர் செய்தால் பாண்டவர்களை உடனேயே ஒழித்து விடலாம்.'' என்றான்.

துரியோதனனும் தம் தம்பிகளையும் மற்றவர்களையும் அழைத்துக் கொண்டு பீஷ்மரிடம் போய் ''பிதாமகரே! உங் களுக்கு என் மீது கோபமோ அல்லது என் துரதிஷ்டம்தான் காரணமோ தெரிய வில்லை. நீங்கள் பாண்டவர்களைக் காத்தே வருகிறீர்கள். இதுதான் உங்கள் நோக்கம் என்றால் நீங்கள் போரிடாமல் விலகி இருங்கள். கர்ணன் படைகளுக்குத் தலைமை தாங்கி பாண்டவர்களைத் தோற்கடிக்கட்டும்'' என்றான்.

இது பீஷ்மரின் மனதை ஈட்டி கொண்டு குத்துவது போலாயிற்று. அவரது கண்கள் கோவைக் கனி போலச் சிவந்தன. அவரும் ''துரியோதனா! என்ன வார்த்தை பேசி விட்டாய்? என் முயற்சியில் எவ்விதக் குறைவும் இல்லை. நான் எதிரிகளை அழிக்காமலா இருக்கிறேன்? அர்ஜுனன் மாபெரும் வீரன் என்று உனக்குத் தெரியாதா?

உன்னை கந்தர்வர்கள் சிறை பிடித்துப் போன போது இந்த கர்ணன் எங்கே போயிருந்தானாம்? விராட தேசத்து மாடு பிடி சண்டையில் அர்ஜுனன் ஒருவனாகவே இருந்து நம்மை எல்லாம் வெல்ல வில்லையா? அவன் இந்திரனையே வென்று கவசங்களைப் பெறவில்லையா? இந்தப் போர் வேண்டுமென்று நீயாக வேண்டுமென்று வாங்கிக் கொண்ட வினைதானே! உன் எதிரிகளை நீயே உன் கையால் கொல். அதைக் கண்டு ஆனந்தப்படுகிறோம். என்னைப் பொறுத்த வரையில் சிகண்டி ஒருவனைத் தவிர மற்ற எல்லோரையும் போரில் கொல்வேன். அப்படிச் செய்ய முடியா விட்டால் நான் இறந்து போவேன். இதைத் தவிர வேறு எதுவும் சொல்வதற்கு இல்லை. நான் நாளைக்கு மிகவும் பயங்கரமாகப் போர் புரியப் போகிறேன். இனி நீ இப்போது போய்ப்படுத்து நிம்மதியாகத் தூங்கு'' என்று கூறினார்.

துரியோதனன் பீஷ்மர் சொன்னதைக் கேட்டு மிகவும் திருப்தி அடைந்து எல்லோரையும் கூட்டிக் கொண்டு திரும்பிச் சென்றான். மறுநாள் காலையில் தன் பக்கம் போரிட வந்துள்ள அரசர்களிடம் அவன் ''இன்று பீஷ்மர் பயங்கரமாகப் போர் புரியப் போகிறார். வெற்றி நிச்சயமாக நமக்குத்தான். எனவே பீஷ்மருக்கு எவ்வித ஆபத்தும் வராமல் நாம் அவரைப் பாதுகாக்கவும் வேண்டும். சகுனி, சல்லியன், கிருபர், துரோணர், விவிம்சதி ஆகிய எல்லோரிடமும் இதைத் தெரிவிக்க வேண்டும்'' என்றான்.



ஒன்பதாவது நாள் போர் ஆரம்பமாகியது. பீஷ்மர் சர்வதோபத்திரம் என்ற வியூகத்தை அமைத்து கௌரவப் படைகளை நிறுத்தினார். பாண்டவர்கள் அதற்கு மாற்றான வியூகம் ஒன்றை அமைத்தார்கள். போர் ஆரம்பமாகியது அபிமன்யு கௌரவப் படைகள் மீது சீறிப் பாய்ந்து தாக்குதலை ஆரம்பித்தான். கௌரவப் படைகளையும் சைந்தவன், கிருபர் துரோணர், அசுவத்தாமன் என்று ஒருவரைக் கூட அவன் விடவில்லை. அது கண்டு துரியோதனன் அலம்பசன் என்ற ராட்சஸனை அபிமன்யுவைத் தாக்க அனுப்பினான்.

அபிமன்யு தன்னைத் தாக்க வந்த அலம்பசனை எதிர்த்தான். அலம்பசனால் அபிமன்யுவின் முன் நின்று போர் புரிய முடியவில்லை. அதனால் அவன்

மாயப் போர் புரிந்தான். அதிலும் அவன் தோற்றுப் போய் ஓடி விட்டான். அதன்பின் அபிமன்யு கௌரவப் படையைச் சின்னாபின்னமாக்கி சிதறி ஓடச் செய்தான்.

இச்சமயத்தில் பீஷ்மர் வந்து அபிமன்யுவை எதிர்க்கலானார். அச்சமயத்தில் அர்ஜுனன் அபிமன்யுவின் உதவிக்குச் சென்றான். பீஷ்மருடன் பல மகாவீரர்கள் இருந்தார்கள். அது போல அர்ஜுனனுடன் பல மாவீரர்களும் இருந்தனர். இரு தரப்பினரும் கடும் போர் புரிந்தனர்.

இன்னொரு புறத்தில் பீமனும் பகதத்தனும் கடும் போர் புரிந்தனர். பீமன் அவனது யானைப் படையைத் தாக்கினான். யானைகள் பயந்து ஓடின. அன்று பீஷ்மரோ பயங்கரமாகப் போர் புரிந்தார். பாண்டவர் படைக்குப் பெருத்த சேதம் ஏற்பட்டது. பல வீரர்கள் தம் ஆயுதங்களைப் போர்க்களத்திலேயே போட்டு விட்டு ஓடிப் போயினர். இருட்ட ஆரம்பித்தது. அன்றையப் போரும் முடிந்தது.

பீஷ்மர் வெகுண்டு எழுந்தால் எவ்வளவு பயங்கரமாகப் போர் புரிவார் என்பதை அன்று பாண்டவர்கள் பார்த்தார்கள். தருமருக்கு இனி எதற்கு இந்தப் போர் என்ற விரக்தி கூட ஏற்பட்டு விட்டது. தருமர் கிருஷ்ணரிடம் போய் இனி என்ன செய்ய வேண்டுமென்று கேட்டார். கிருஷ்ணரும் தருமருக்கு ஆறுதல் கூறி ''பீஷ்மரை அர்ஜுனன் கொல்லா விட்டால் நான் அவரைக் கொல்கிறேன். பீஷ்மர் இறந்து விட்டால் வெற்றி உனக்கேதான். கவலைப் படாதே. அர்ஜுனன் பீஷ்மரைக் கொல்வான்'' என்றார்.

அது கேட்டு தருமர் ''பீஷ்மர் எங்கள் நலனை விரும்புபவர். நாம் வெற்றி பெற வேண்டுமென நினைப்பவர். அதனால் அவருடைய மரணம் எவ்வாறு நிகழும் என்று நாம் அவரிடமே கேட்போம்'' என்றார். கிருஷ்ணரும் ''ஆம். இதுதான் சரி. நாம் கேட்டால் அவர் கூறுவார்'' என்றார்.



# அம்புலிமாமா

## பாரத தரிசனம் வாசகர்களுக்குப் போட்டி

(இந்த இதழிலுள்ள வினாக்களின் விடைகள் அடுத்த இதழில் பிரசுரிக்கப்படும். அதற்குள் நீங்கள் அறிய முயன்று பாருங்கள்)
கடந்த நவம்பர் 14ந் தேதி குழந்தைகள் தினமாகக் கொண்டாடப் பட்டது. எனவே இப்போது வினாக்கள் சிறுவர்களைப் பற்றியவையே.

1



அ. சந்தீப முனிவரின் குருகுலத்தில் கிருஷ்ணருடன் சேர்ந்து படித்து விட்டு, பல ஆண்டுகளுக்கு பின் துவாரகைக்கு அவரைப் பார்க்க வந்தவர் யார்?

ஆ. தந்தையின் விருப்பத்திற்கு மாறாக மாபெரும் விஷ்ணு பக்தனாக இருந்த ராக்ஷஸ ராஜகுமாரன் யார்?

இ. தந்தையின் மடிமீது உட்காரப் போன போது அவனது சிற்றன்னையால் தடுக்கப்பட்டு அவமானப் படுத்தப் படவே, காட்டிற்குப் போய் விஷ்ணு பகவானை நோக்கிக் கடுந்தவம் புரிந்து அவரது அருளால் உயரிய இடம் பெற்ற அரச குமாரன் யார்?

ஈ பாம்பால் தீண்டப்பட்டு உயிரிழந்த தன் மகனை அவனது தாயார் மயானத்திற்கு எடுத்துச் சென்ற போது அங்கு அவள் தன் கணவனக் கண்டாள். பாம்பு தீண்டி இறந்து போன அரச குமாரன் யார்?

உ பாரதப் போரில் பத்ம வியூகத்தில் அகப் பட்டுக் கொண்டு போராடி வீர மரணம் அடைந்த இளம் வயதினனான பாண்டவ ராஜகுமாரன் யார்?

2

பாலசன்னியாசி என்று பெயர் பெற்ற இளம் வயது சிறுவன் ஒருவன் வேதாந்த விஷயங்கள் பற்றி சொற்பொழிவாற்றுகையில் மனிதன் அகங்காரமோ ஆணவமோ கொள்ளலாகாது என்று கூறிக் கொண்டிருந்தான். அப்போது நன்கு வயது வந்த ஒருவர் எழுந்து "அகங்காரம் என்றால் என்ன என்று உன்னால் விளக்க முடியுமா?" என்று கோபத்தோடு கேட்டார். அவர் மாபெரும் பண்டிதர் என்று புகழ் பெற்றவர். தான் இருக்கும் போது தனக்கு முன்னால் ஒரு சிறுவன் வேதாந்த விஷயங்களை மக்களுக்குக் கூற அவர்களும் வந்து அவன் கூறுவதைக் கேட்கிறார்களே என்பதுதான் அவரது கோபத்திற்குக் காரணம்.

பால சன்னியாசி எதுவும் பதில் கூறவில்லை. ஆனால் அந்தப் பண்டிதரோ மீண்டும் மீண்டும் அதே கேள்வியைக் கேட்டார். பால சன்னியாசி எதுவும் கூறாமல் அவரைப் பார்த்தவாறே தன் சுட்டு விரலால் அவரையே காட்டினான். பண்டிதர் திகைத்து ஆடிப் போனார். அகங்காரத்திற்குத் தானே எடுத்துக் காட்டு என்பதை அவர் உணர்ந்ததால் உடனே அவர் அந்த பாலசன்னியாசியின் கால்களில் விழுந்து தம்மை மன்னித்து சீடனாக ஏற்று கொள்ளுமாறு வேண்டினார்.



அந்த பால சன்னியாசி யார்? அவரிடம் கேள்வி கேட்ட அந்த மாபெரும் பண்டிதர் யார்?



# சரவணனின் சாக்குமூட்டை

சங்கரபுரத்தில் சரவணன் ஒரு பெரிய பணக்காரன். பணக்காரன் பின்னால் பத்துப் பேர் என்பதற்கு ஏற்ப அவன் சொல்வதற்கு ஆமாம் போட எப்போதும் சிலர் அவனைச் சூழ்ந்து இருந்தனர். அவர்கள் சரவணனைப் புகழ அவனும் தான் மகாமேதை என்றும் சாமர்த்தியசாலி என்றும் எண்ணிப் பெருமிதம் கொண்டிருந்தான்.

இந்நிலையில் அந்த ஊருக்கு வரதன் என்பவன் வந்தான். அவன் ஒரு பெரும் தீ விபத்தில் தன் பெற்றோரையும் வீடு வாசலையும் இழந்ததால் தான் தன் ஊரைவிட்டு சங்கரபுரத்திற்கு வந்தான். அவன் அவ்வூரில் அங்குமிங்கும் அலைந்து திரிந்து முடிவில் பெரியண்ணன் என்பவனின் வீட்டில் வேலையாளாகச் சேர்ந்தான். பெரியண்ணனுக்கு வயது அறுபது. அவன் தன் மகன்களோடும் மருமகள்களோடும் சண்டை போட்டு அவர்களை வீட்டை விட்டு வெளியேற்றி விட்டான். அவனுடைய மனைவி உமையாள் மட்டும் வீட்டை விட்டுப் போகாமல் தன் கணவனின் வசைவுகளையும் ஏசல்களையும் பொறுத்துக் கொண்டு அவனுடனேயே இருந்து வந்தாள்.

வரதன் கெட்டிக்காரன். நல்ல விதமாய்ப் பேசி எதையும் சாதிப்பவன். அவன் சொல்வதையெல்லாம் ஆவலுடன் எல்லோரும் கேட்டு ரசித்து வந்தார்கள். வரதனின் பேச்சுத்திறமையாலும் விடா முயற்சியாலும் பெரியண்ணனும் மனம் மாறி தன் மனைவி உமையாளைக் கடித்து கொள்ளாமல் சுமுகமாக இருக்கலானான். சில மாதங்களுள் வரதன் நல்ல விதமாகப் பெரியண்ணனுக்கு எடுத்துச் சொல்லி வீட்டை விட்டுப் பிரிந்திருந்த அவனது மகன்களையும் மருமகள்களையும் அவ்வீட்டிற்கே மறுபடியும் வரச் செய்து எல்லோரும் ஒற்றுமையுடன்

சங்கரசுவாமி



நல்ல விதமாய் வாழ வழி செய்தான். இப்படியாக ஓராண்டு கழிந்தது.

வரதனின் இது போன்ற நற்செயல்களால் அவனுக்கு அவ்வூரில் நல்ல பெயர் கிடைத்துவிட்டது. வரதன் பேச்சிற்கு மறு பேச்சு இல்லை என்று கூறி ஊரார் அவனைப் புகழ்ந்து வந்தனர். ஒரு காசு கூட இல்லாமல் அவ்வூருக்கு வந்த வரதன் ஒரே வருடத்தில் எல்லோருடைய பாராட்டுதல்களையும் பெற்றுக் கொண்டு வருவது சரவணனுக்கு உறுத்தியது. அவன் வரதனை எப்படி மட்டம் தட்டுவது என்று யோசிக்கலானான்.

இந்த சமயத்தில் சின்னப்பன் என்பவன் சரவணனிடம் பணம் கடன் கேட்க வந்தான். அவனுடைய மகள் அன்னம். அவளை அந்த ஊர் நகை வியாபாரி ரத்தினசாமியின் மகன் மாணிக்கம் மணக்க விரும்பினான். சின்னப்பனுக்கும் தன் மகளை மாணிக்கத்திற்குத் திருமணம் செய்து வைக்க விருப்பமே. ஆனால் ரத்தினசாமி கேட்கும் வரதட்சிணை பத்தாயிரம் ரூபாய்க்கு சின்னப்பன் எங்கே போவான்? மாணிக்கமும் தன் தந்தையின் விருப்பத்திற்கு மாறாக நடக்க முடியாது என்றும் அன்னத்திடம் கூறி விட்டான்.

தன்னிடம் கடன் கேட்ட சின்னப்பனிடம் சரவணன் "நீ ஏன் தலைக்குமேல் கடனை வாங்கி உன் மகளுக்குத் திருமணம் செய்ய வேண்டும்? ஊருக்கெல்லாம் வழி காட்டும் வரதனிடம் போய் இதற்கு என்ன வழி என்றுகேள். அவன் எல்லோருடனும் பேசி பிரச்சினையை நல்ல விதமாய்த் தீர்த்து வைப்பான்" என்று எகத்தாளமாகக் கூறி அனுப்பினான்.

சின்னப்பனும் "அடேடே! எனக்கு இது முதலில் தோன்றவில்லையே" என எண்ணி வரதனைக் கண்டு தன் மகளின் திருமணப் பிரச்சினையைக் கூறினான். அது கேட்ட வரதன் "அன்னம் போன்ற அழகிய பெண்ணை வரதட்சிணை இல்லாமல் திருமணம் செய்து கொள்ள மாணிக்கத்திற்குக் கசக்கிறதா? அன்னம் விரும்பினால் நானே மணந்து கொள்கிறேன். வரதட்சிணை எதுவும் வேண்டாம்" என்றான்.

இப்படி வரதன் சொன்னதை மாணிக்கம் கேள்விப்பட்டதும் சின்னப்பனின் வீட்டிற்கு ஓடோடி வந்து "வரதட்சிணை விஷயமாய் என் தந்தையிடம் பேசி

அவரது பிடிவாதத்தைத் தளர்த்தி விடுவேன். வரதட்சிணையே வேண்டாம். அன்னத்தை எனக்கே கல்யாணம் செய்து வையுங்கள்.'' என்று வேண்டினான். அச்சமயத்தில் வரதனும் அன்னமும் அங்கேதான் இருந்தார்கள். அன்னம் மாணிக்கத்தைப் பார்த்து ''இந்த வரதன் வரதட்சிணையே இல்லாமல் என்னை மணந்து கொள்வதாகக் கூறிய பிறகு தானே இப்படிக் கூறுகிறீர்கள். இவர் மட்டும் இதைச் சொல்லி இராவிட்டால் வரதட்சிணை இல்லாமல் என்னை மணக்க முடியாது என்றுதானே கூறி இருப்பீர்கள். அதனால் நான் வரதனைத்தான் மணக்கப் போகிறேன்.'' என்றாள்.

அது கேட்டு வரதன் ''மாணிக்கத்திற்கு மனம் மாறவே அவ்வாறு கூறினேன். நன்கு யோசி. பணமுள்ள அவனை மணந்தால் நீ சுகமாக இருக்கலாம். ஏழையாகிய என்னை மணந்தால் நீ சிரமப்பட வேண்டித்தான் இருக்கும்'' என்றான். அன்னமோ மாணிக்கத்தை மணக்கத் திட்டவட்டமாக மறுத்து விடவே அவன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு திரும்பிச் சென்றான்.

சில நாட்களுக்குப் பின் வரதனுக்கும் அன்னத்திற்கும் திருமணம் நடந்தது. அச்சமயத்தில் சிலர் மரகதத்தீவிற்குச் சுற்றுலா போக ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். அங்கு பல அதிசயப் பொருள்கள் கிடைக்கின்றனவாம். சரவணன் இந்த சமயத்தில் வரதனுக்குப் பிரச்சினைகளை ஏற்படுத்தி வேடிக்கை பார்க்க நினைத்தான். அதனால் அவன் வரதனைக் கண்டு ''வரதா! நான் மரகதத்தீவிற்குப் போக போகிறேன். அங்கு நீயும் அன்னமும் போய் வர உன்னிடம் அவ்வளவு பணம் இருக்காது என்று எனக்குத் தெரியும். அன்னம் என் மகளுக்குச் சமம். அவளை என்னுடன் அனுப்பு. மரகதத்தீவைச் சுற்றிக் காண்பிக்கிறேன்'' என்றான்.



வரதனும் ''இப்படி நீங்கள் சொன்னதற்கு மிக்க நன்றி. இரண்டு மாதங்களுக்குப் பின் நாங்களே அங்கே போய் விட்டு வர எண்ணி இருக்கிறோம். அதனால் இப்போது நீங்கள் போய் விட்டு வாருங்கள்'' எனவே சரவணனும் எதுவும் கூற முடியாமல் சென்றான் எற்கனவே திட்டமிட்டபடி அவன் சிலருடன் மரகதத்தீவிற்குப் போய் விட்டுப் பதினைந்து நாட்களுக்குப் பின் திரும்பி வந்தான். அதற்குப் பின்

ஊராரிடம் ''நான் எவ்வளவோ அதிசயப் பொருள்களை மரகதத்தீவில் பார்த்தேன். சில பொருள்களை வாங்கியும் வந்திருக்கிறேன்'' என்று அவற்றைப் பெருமையுடன் காட்டினான். பிறகு ''மரகதத் தீவு பற்றி இன்னும் நிறையச் சொல்கிறேன். அடுத்த வாரம் வாருங்கள்'' என்று சொன்னான்.

ஆனால் ஒரு வாரமல்ல இரண்டு வாரங்கள் கழிந்தும் கூட சரவணனைப் பார்க்க யாருமே வரவில்லை. அதற்குக் காரணம் வரதன் மரகதத்தீவிற்குப் போய் வந்து அவ்வூராருக்கு அத்தீவிலிருந்து வாங்கி வந்த அதிசயப் பொருள்களைப் பரிசாகக் கொடுத்திருந்ததுதான். இதைக் கேள்விப் பட்ட சரவணன் அப்பொருள் களைப் பரிசாகப் பெற்ற சிலரைக் கூப் பிட்டு அவர்கள் வரதனிடமிருந்து பெற்ற பரிசுகளை வாங்கிப் பார்த்தான். பிறகு அவன் ''பூ! இதுதானா? மயிலிறகு விசிறி, ஓலைப்பெட்டி, மண்பொம்மை இதெல்லாமா அதிசயப் பொருள்கள்! நான் உங்களுக்குப் பரிசு கொடுக்க பல தங்க, வெள்ளி சாமான்களை ஒரு சாக்கு மூட்டையில் போட்டு ஒருகப்பலில் ஏற்றி னேன். இன்னமும் அந்த கப்பல் இங்கே வரவில்லை. வந்ததும் என்னவெல்லாம் கொடுக்கிறேன் பாருங்கள்'' என்றான்.

அப்போது வரதன் அந்தப் பக்கமாக வரவே சரவணன் அவனை அழைத்து ''எல்லோருக்கும் பரிசு என்று என்னென் னவோ வாரி வழங்கி இருக்கிறாயே. எனக்கு ஒன்றும் இல்லையா?'' என்று கேட்டான். வரதனும் சிரித்துக் கொண் டே ''உங்களுக்குக் கொடுக்க வேண்டிய பரிசை நீங்கள் கப்பலில் ஏற்றச் சொன்ன சாக்கு மூட்டையில் போட்டிருக்கிறேன். அது ஒரு முத்துமாலை. அந்த சாக்கு மூட்டைதான் இன்னும் சில நாட்களில் வந்து விடப் போகிறதே. அப்போது அதை எடுத்துப் பாருங்கள்'' என்றான்.

அது கேட்டு எல்லோரும் பலமாகச் சிரித்தார்கள். ஒருவன் சற்று பலமாகவே ''சரவணன் சொன்னது சாக்குமூட்டை அல்ல, புளுகு மூட்டைதான்'' என்றான். சரவணன் அவமானத்தால் தலை குனிந்து நின்றான்!




THE AMUL CHEESE BOY
IN PICNIC PANIC


One bright sunny day...


...a picnic is in progress.


Little Munnu Verma crawls away.
GURGLE


Suddenly, huge rocks come tumbling down the mountain.
RUMBLE


Amul cheese boy eats an Amul cheese slice...


...and becomes strong and powerful.


He smashes the falling rocks...
BANG


...reducing them to small pieces.
CRACK


Munnu is rescued and back with his family.


All thanks to the cheese that has more milk in it.


Amul cheese slices.
Amul cheese. Yes please!
Amul



# மூக்கும் மூக்குத்தியும்

அந்த கிராமத்தில் ஆலமரத்து மேடையில் அமர்ந்து கோஸ்வாமி துளசிதாசர் தாம் இயற்றிய ராமாயண மான ராம சரித மானஸை அங்கு கூடி இருந்த கிராம மக்களுக்கு உருக்கமாக விவரித்துக் கொண்டிருந்தார். ராம பிரானின் மகிமையை அங்கு கூடி இருந்த பக்தர்கள் மெய் மறந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள். ராமபிரானின் கல்யாண குணங்களை துளசிதாசர் கூறியவிதம் யாவரையும் கவர்ந்து விட்டது.

இரண்டு மணிநேரம் இந்த சொற் பொழிவு நடந்தது. அதன்பின் பக்தர்கள் எழுந்து மெதுவாகக் கலைந்து சென்று கொண்டிருந்தார்கள். சிலர் துளசிதாசரின் பாதங்களைத் தொட்டு வணங்கிவிட்டுச் சென்றார்கள். துளசி தாசரும் ராம நாமத்தை ஜெபித்தவாறே அவர்களை வாழ்த்தி அனுப்பிக் கொண்டிருந்தார்.

அப்போது துளசி தாசரைத் தம் வீட்டில் தங்கச் சொன்ன பிரமுகர் அவர் முன் வந்து ''சுவாமி! தங்களுக்கு நேர மாகி விட்டதே. என் இல்லத்திற்கு வந்து ஸ்நானம் செய்து ஜெபதபங்களை முடித்து ஆகாரம் செய்து விட்டு படுத்து உறங்க வேண்டுமே. நாம் போகலா மா?'' என்று பணிவுடன் கேட்டார்.

துளசிதாசரும் போகலாமே என்று கூறி மேடையிலிருந்து இறங்கும் போது ஒரு மூலையில் பெண் ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். அவள் தயங்கி நிற் பதைக் கண்ட அவர் அவள் தம்மிடம் ஏதோ சொல்ல விரும்புகிறாள் என்ப தைப் புரிந்து கொண்டார். அதனால் அவர் அவளிடம் ''என்னம்மா! நீ என் னிடம் ஏதாவது சொல்ல விரும்பு கிறாயா?'' என்று கனிவுடன் கேட்டார்.

அவள் மிகவும் மகிழ்ந்து போய் அவரது பாதங்களில் விழுந்தாள். அவள்

சுதா குமார்

எழுந்திருக்க ஓரிரு நிமிடங்கள் ஆகவே துளசிதாசரும் ''எழுந்திரம்மா! நீ என்ன சொல்ல விரும்புகிறாய் என்பதைக் கூறுகிறாயா?'' என்று கேட்டார். அவளும் எழுந்து நின்று ''விஷயம் ஒன்றும் பெரிதில்லை. இருந்தாலும் சொல்கிறேன். என் முகத்தில் ஏதாவது ஒரு அற்புதத்தைப் பார்க்கிறீர்களா?'' என்று கேட்டாள். அவரோ ''கடவுள் படைத்த உன் முகமே அற்புதமாக இருக்கிறதேயம்மா!'' என்றார். அவளும் ''என் முகத்தில் அற்புத ஒளி வீசும் மூக்குத்தியை நீங்கள் பார்க்கவில் லையா?'' என்று கேட்டாள்.

அவரும் ''ஆம் பார்க்கிறேன். அது மிக அழகாக இருக்கிறது'' என்றார். அவளும் ''இது மிக நன்றாகத்தானே இருக்கிறது?'' என்று ஆவலுடன் கேட்டாள். அவரும் ஆமாம் எனவே அவளும் ''நான் வேண்டாமென்று கூறியும் ஏகப்பட்ட விலை கொடுத்து என் கணவர் இதை வாங்கிக் கொண்டு வந்து ஆசையாக எனக்குக் கொடுத்தார். என் மீது அவருக்குக் கொள்ளை ஆசை, மூக்குத்தி அழகாகத்தானே இருக்கிறது?'' என்று மறுபடியும் கேட்டாள்.

துளசிதாசரும் ''மூக்குத்தி அழகாகத் தான் இருக்கிறது. இதை வாங்கிக் கொடுத்து உன் முகத்தை மேலும் அழகுறச் செய்த உன் கணவனின் ஆசை எப்படிப் பட்டது என்றும் கூறினாய். அதைக் கேட்க மிகவும் சந்தோஷமாக இருக்கிறது. ஒரு விஷயம். மூக்குத்தி கொடுத்தவன் மேல் நீ எவ்வளவு ஆசை வைத்திருக்கிறாயோ அதே போன்ற ஆசையை நீ உனக்கு அழகான மூக்கை அளித்த பகவான் மீது வைக்க வேண்டாமா? இதை நினைவில் வைத்துக் கொண்டு அந்த பகவானை நினைத்து வழிபட்டு வா. உனக்கு நல்லதே நடக்கும்'' என்று கூறி ஆசீர்வதித்தார்.

அவளும் ''அப்படியே செய்கிறேன் சுவாமி'' என்று கூறி அவரை மறுபடியும் வணங்கி விட்டுச் சென்றாள்.





# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

**போட்டோ வாக்கியப் போட்டி**

*(முகவரி கீழே தரப்பட்டுள்ளது)*





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி டிசம்பர் 25-ம் தேதிக்குள் வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் பிப்ரவரி 2001 மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

## வாழ்த்துக்கள்



**அக்டோபர் 2000 போட்டியில்**
பரிசு பெற்றவர் :
**தமிழ் நெஞ்சன்**
6, இளங்கோ அடிகள் தெரு,
மீனாட்சிப்பேட்டை,
பாண்டிச்சேரி - 605 009.



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவதுபோட்டோ : கை பிடிக்க வாங்க!

இரண்டாவதுபோட்டோ : கை கொடுக்க வாங்க!

